### *Groundnuts*

*96 Q.—DR. A. SREENIVASAN : Will the Hon the Minister for Agriculture be pleased to state—

(a) whether the Government have received any representations about the toxic products of groundnuts consequent on the fungus infections;

(b) if so, the action taken or proposed to be taken thereon; and

(c) whether any research is carried on about the fungus infections in groundnuts, their storage and manufacture of groundnut meals?

THE HON. SRI P. KAKKAN : (a) No, Sir.

(b) Does not arise.

(c) Research on the storage of groundnut seeds and cakes was undertaken in this State from 1943–47 and 1958–62.

No research is being done in this State on the manufacture of groundnut meal.

DR. A. SREENIVASAN : Sir, has the attention of the Government been drawn by anybody to the poisonous effects of the consumption of these groundnuts and groundnut products?

THE HON. SRI P. KAKKAN : I want a separate question, Sir.

SRI G. KRISHNAMOORTHY : Is it a fact that folidol or other strong insecticides and pesticides that are used for the preservation of these groundnuts and groundnut products in the stores are injurious to human beings?

THE HON. SRI P. KAKKAN : I think it may be so here and there in one or two cases but the Government are examining it in the research stations.

DEPUTY CHAIRMAN : Questions are over.

**[*Note*.—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the member.]**

## II.—GENERAL DISCUSSION ON THE BUDGET FOR THE YEAR 1962-63—*cont.*

*திரு. கே. எஸ். அப்துல் வகாப் : மன்றத் தலைவர் அவர்களே, சென்ற மூன்று ஆண்டு காலமாக சமர்ப்பிக்கப்பட்ட பட்ஜெட்டுகள் புதிய வரிகள் இல்லாத பட்ஜெட்டுகளாக சமர்பிக்கப்பட்டு வந்தன. அந்த ஆண்டுகளில் ஏற்பட்ட பற்றுக்குறை கடன்கள் மூலம் பூர்த்தி செய்யப்பட்டதாக முன்பு பேசிய பல அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். கடன்கள் மேலே மேலே சேர்ந்துகொண்டே தாங்க முடியாமல் போய்க்கொண்டேயிருந்தன. அதைச்சரிகட்ட முடியாத நிலை உருவாகின்ற சிக்கலான சூழ்நிலையில் முன்பு நிதி மந்திரியாக இருந்த மதிப்புமிக்க அமைச்சர் அவர்கள் டில்லிக்குச் சென்று

விட்டார்கள். அந்தச் சிக்கலான சூழ்நிலையை ஏற்றுக்கொண்ட நமது இன்றைய நிதி அமைச்சருடைய நிலையின் பேரில் நான் பரிதாபப்படுகிறேன். வரிகள்போட்டுத்தான் சமாளிக்க வேண்டு மென்ற நிலையில் அவர்கள் இந்தப் பிரகடனத்தைச் செய்யும் போது, பல நல்ல திட்டங்களையும் அவர்கள் அந்த பட்ஜெட்டி லேயே பிரகடனப்படுத்தியிருக்கிறார்கள். அதைத் தொடர்ந்து பேசிய அங்கத்தினர்களுடைய விவாதத்தைப் பார்க்கும்போது, குளிக்கப் போனவன் சேற்றைப் பூசிக்கொண்டதைப் போல அமைந்திருக்கிறது இந்தப் பட்ஜெட் சமர்ப்பிக்கப்பட்டிருக்கிற விதமும் விவாதமும். நாடு சுதந்திரம் அடைந்து 15 ஆண்டுகள் ஆகிவிட்டன. அடிமைத் தளத்திலே வாழ்ந்த அன்று ரோடிலே கிடக்கும் சாணியை எடுத்து இராட்டி அடித்து சுவர்களிலே காய வைத்து வாழ்ந்த ஏழைகள் இருந்தார்கள். அந்த நிலை ஏழை களுக்கு இன்றும் மாறவில்லை. உடைந்த ஓட்டைக் குடிசை களிலே அடிமைத் தளத்திலிருந்த ஏழைகள் வாழ்ந்தார்கள். இன்றைக்கும் அவர்கள் அதே நிலையில்தான் இருக்கிறார்கள். சாப் பிட வழியில்லாமல் கஞ்சி குடித்தார்கள் அந்தக் காலத்தில், அது வும் அரை வயிறு. அந்த நிலையும் இன்றைக்கு மாறவில்லை. நாடு சுதந்திரம் அடைந்து ஏழை மக்களுக்கு நேரடியாக எந்த உருப் படியான நலனும் கண்கூடாகக் காணக் கிடைக்கவில்லை. திட்டங் கள் போட்டு அவர்களுடைய நிலையை உயர்த்த வேண்டுமென்று சொல்லப்படுகிறது. ஆனால் அதற்குப் பணம் வேண்டும். பணம் வேண்டுமென்றால் எந்த முறையினைக் கையாண்டாவது பணம் சேகரித்து விடலாம் என்பது அல்ல . . . .

திரு. கே. எஸ். அப்துல் வகாப் : பணம் எல்லா வழிகளிலும் சேகரிக்கக்கூடாது. சில நேர்மையான முறைகளில்தான் சேகரிக்க வேண்டுமென்பது என் அபிப்பிராயம். வரியை அவர்கள் தாங்க முடியாத அளவு போட்டுக்கொண்டே போகக்கூடாது. உதாரணத் திற்குச் சொல்லவேண்டுமென்றால், மேலே போட்டுக்கொள்வதற் குக் கோட்டு இல்லை. சட்டை, வேஷ்டியில்லை. ஜட்டிமட்டும் போட்டுக்கொண்டிருந்தவர்கள் கோவணம் கட்டிக்கொள்ளும் அளவிற்கு, மேலே மேலே வரி போடுவது கூடாது என்பதுதான். பட்ஜெட் என்பது நமக்குப் புதுமை அல்ல. இது உலகத்தின் எல்லா நாடுகளிலும் அமைந்த நடைமுறை. ஆனால் போடக் கூடிய வரிகள் பணக்காரர்களைப் பாதிக்கக் கூடியதாக அமைய வேண்டும். ஏழை மக்களைப் பாதிக்கக்கூடியதாக அமையக் கூடாது என்பது எனது தாழ்மையான சமர்ப்பணமாகும். போடக்கூடிய வரிகள் நேர்முகமாகவோ மறைமுகமாகவோ ஏழைகளைப் பாதிக்கின்றன. முன்பு போட்டவைகளையே தாங்க முடியாமல் இருக்கும் அவர்களுக்கு மேலே மேலே வரிபோடு வது கூடாது. பணக்காரர்களுக்கு எவ்வளவு போட்டாலும் தாங்கும். யானை மீது ஏற்ற வேண்டிய சுமையை பூனை மீது ஏற்று வது பொருந்தாது என்றுதான் நான் சொல்வது. ஒரு கார்க்கை எவ்வளவு பிழிந்தாலும் அதிலிருந்து ஒரு சொட்டுத் தண்ணீகூடப் பெறமுடியாது. அந்த முறையில் தாங்கமுடியாத நிலையில் வாழும் 3–10 p.m.

**** Expunged as ordered by the Chair.

[திரு. கே. எஸ். அப்துல் வகாப்] [5th July 1962

ஏழைகளுக்கு மேலே மேலே வரிபோடும் அபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ளவேண்டு மென்பது என்னுடைய அபிப்பிராயம். இப்போது எலக்ட்டிரிசிட்டியின் மீது வரி போட்டிருக்கிறார்கள். இந்த வரியை ஆராய்ந்தால் லோ டென்ஷன், ஹை டென்ஷன் என்று இரண்டு வகையிலும் உயர்த்தப்பட்டிருக்கிறது. இன்றைக்கு லட்சக்கணக்கான குடிசைகளில் மின்சார விளக்குகள் எரிவதைக் காண்கிறோம். லோ டென்ஷனில் வரி உயர்த்தப்படுவது இந்த ஏழை மக்களை நேரடியாகப் பாதிக்கும். ஹை டென்ஷனில் வரி உயர்த்திப் போடுவதன் மூலமாக தொழிற் சாலைகளிலே உற்பத்தி விலை கூடுதலாகும். உற்பத்தி விலை கூடும்போது விலைவாசி உயரும். அதுவும் மறைமுகமாக ஏழை மக்களின் மீது ஏற்றுவதாக அமைகிறது. இந்த வரி எந்த நோக்கத்தைக் கொண்டு பார்த்தாலும் ஏழை மக்களைப் பாதிக்கிறது. அரசாங்கம் இதை விட்டுவிட முற்பட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். வரியை விட்டுவிட்டால் பற்றாக்குறையை எப்படி சமாளிப்பது என்று சொல்லலாம். இப்போது போடப்பட்டிருக்கும் வரிகளிலே சில வரிகள் என் அபிப்பிராயத்தில் பெருவாரியாக ஏழைகளைப் பாதிக்கக்கூடாத வரிகளாக அமைந்திருக்கின்றன. அது போன்ற வரிகளை அரசாங்கம் சிந்தித்து கண்டு பிடிக்க முயற்சி செய்யவேண்டும். கண்டபடி வரி போட்டால் அதைப் பாராட்ட முடியவில்லை. உதாரணத்திற்குச் சொல்லவேண்டுமென்றால் நகர மனைகளுக்கு வரி போட்டிருக்கிறார்கள். இது பெருவாரியாக பணக்காரர்களைத்தான் பாதிக்கும். அது போலவே ஸ்டாம்பு வரி பெருவாரியாக பணக்காரர்களைப் பாதிக்கக்கூடியது. மற்றும் குதிரைப் பந்தய வரியும் அப்படித்தான். குதிரைப் பந்தயப் பழக்கம் என்பது எடுபட வேண்டிய ஒரு தீய பழக்கம். ஆனாலும் இன்றைய நிலையில் அது அகற்றப்படக்கூடிய சூழ்நிலையில் இல்லை. அதற்கு வரி போட்டிருக்கிறார்கள். இந்த வரி பெருவாரியாக போடவேண்டிய வரி. இது மேற்கொண்டும் இன்னும் இரண்டு பங்கு உயர்த்தப்பட்டாலும் தாங்கும், பொருந்தும் என்று நான் தெரிவித்துக்கொள்கிறேன். இன்னும் சில வரிகள் நேரடியாகப் பணக்காரர்களைப் பாதிக்கக்கூடிய வரிகள் என்பது என் சொந்த அபிப்ராயம். மெத்தை வீடுகள் கட்டுபவர்களுக்கு வரி போடலாம். கூரை வீடு, ஓட்டு வில்லை வீடுகளுக்கு வரி இல்லாமல் மெத்தை வீடுகளுக்கு போட்டால் அது வசதியுள்ளவர்களைத்தான் பாதிக்கும். இது போல வரி போடுவதைப்பற்றி அரசாங்கம் சிந்தனை செலுத்திப் போடவேண்டும். மற்றும் ரேடியோ வைத்திருப்பவர்களுக்குத் தனியாக வரி போடலாம். அது நேரடியாக ஏழைகளைப் பாதிக்கமுடியாத வரிகள். மற்றும் பிளஷர் கார்களின் பேரில் பணக்காரர்களுக்கு வரி போடலாம். கார்கள் வைத்திருப்பவர்கள் வசதி படைத்தவர்கள்தான். டாக்சியின் பேரிலும் வரி போடலாம். டாக்சியில் செல்லக்கூடியவர்களுக்குப் போடலாம். இது ஏழை மக்களைப் பாதிக்காத வரி. ஆகையால் இந்த மாதிரி பணக்காரர்களைப் பாதிக்கக்கூடிய வரிகளைப் போட்டு அரசாங்கம் செயல்பட வேண்டுமென்பது எனது தாழ்மையான அபிப்பிராயம்.

5th July 1962] [திரு. கே. எஸ். அப்துல் வகாப்]

இப்போது பஸ்களின்மீது வரி ஏற்றப்பட்டிருப்பதால், இதைப் பொறுத்தமட்டில் இந்த வரியை பாராட்டிப் பேசுவதா அல்லது குறை சொல்வதா என்பது எனக்குப் புரியவில்லை. பிளாக் மார்க்கெட்டில் அபின் வியாபாரம் செய்பவர்கள் கொள்ளை லாபம் அடைகிறார்கள். அன்னக்காவடிகளாக வியாபாரத்தைத் துவக்கு கிற காலத்தில் இருந்து, இரண்டு மூன்று ஆண்டுகளில் கோடீஸ் வரர்களாக மாறியிருப்பதை நான் கண்டிருக்கிறேன். அதைப் போல பஸ் தொழில் நடத்துபவர்கள் நிறைய லாபம் அடைகிறார் கள். ஆரம்பத்தில் ஒரு சிறு நிதானத்தில் துவங்குகிறவர்கள் ஒரு சில ஆண்டுகளில் இலட்சாதிபதிகள் ஆகிறார்கள். அந்த மாதிரி நிறைய லாபம் கிடைக்கிற பஸ் தொழில் மீது அதிக வரி போடப்பட்டிருக்கிறது. இந்த வரியை முதலாளிகள் செலுத்தும் படி செய்தால், பாராட்டக்கூடியது. அப்படியில்லாமல் மக்கள் செலுத்தக்கூடிய கட்டணம் உயர்த்தப்பட்டு வரி செலுத்தப்பட் டால், அது கண்டனத்திற்குரியது. ஒரு மைலுக்கு இவ்வளவு தான் கட்டணம் விதிக்கலாம் என்று விதிப்பது அரசாங்க அதிகா ரத்திலுள்ளது. ஆகவே, பஸ் கட்டணம் உயர்த்தப்படமாட்டாது என்பதற்கு கனம் நிதி அமைச்சர் அவர்கள் வாக்குறுதி அளிக்க வேண்டும் என்று பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தது, லாரிகளின்மீது வரி உயர்த்தப்பட்டிருக்கிறது. லாரிகளில் இப்போது வாடகை வாங்கும் விதம் ஒரு நிதானத்தி லில்லை. வாடகை அரசாங்கக் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டு இல்லை. சமய சந்தர்ப்பத்திற்கு தகுந்தாற்போல, நினைத்தபடி உயர்த்திக் கொள்கிறார்கள். இந்த நிலையில் அவர்கள்மீது வரி போட்டால், அவர்கள் வாடகையை உயர்த்தித்தான் சரிகட்டுவார்கள். ஆகையால் இந்த வரி நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ ஏழை மக்களைப் பாதிக்கக்கூடியதாக அமைகிறது. ஆகவே, இந்த வரி எடுபட அரசாங்கம் சிந்தனை செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தது, நிலவரி உயர்த்தப்பட்டிருக்கிறது. இதுவும் நேரடி யாக ஏழை மக்களைப் பாதிக்கக்கூடியது. இதையும் நீக்குவதற்கு அரசாங்கம் சிந்தனை செலுத்தவேண்டும்.

மற்றொரு அம்சம் நான் குறிப்பிட விரும்புவது பாடபுத்தகங் களைப் பற்றியது. பாடப் புத்தகங்களுக்கு அங்கீகாரம் அளிக்க அரசாங்கம் ஒரு கமிட்டியை அமைத்து அதன் அங்கீகாரத்தைப் பெற்ற புத்தகங்கள் தான் பாடபுத்தகங்களாக பள்ளிக்கூடங்களில் வைக்கப்படுகின்றன. அரசாங்கத்தால் வெளியிடப்படும் புத்த கங்களுக்கு இந்தக் கமிட்டி கண்காணிப்பில்லை என்பதாகத் தெரிகிறது. தனிப்பட்ட ஆட்கள் எழுதக்கூடிய புத்தகங்களுக்கு இந்தமாதிரி தணிக்கை இருக்கிறது. அந்தப் புத்தகங்களில் நம் முடைய இஸ்லாம் மதத்தைப்பற்றிச் சில பாடங்கள் வெளியிடப் டிருக்கின்றன அதைப் பார்க்கிறபோது சில பாடங்களில் நமது அடிப்படைக் கொள்கைகள் தலைகீழாக மாற்றி எழுதப்பட்டிருக் கின்றன. இந்த ஆண்டில் நான் ஒரு சில புத்தகங்களைப்

பார்த்தேன். நாகூரில் உள்ள தர்காவிற்கு அங்கே உள்ள முஸ்லீம் கள் சென்று தொழுகிறார்கள் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த தர்கா என்பதை மகான்கள் அடங்கி இருக்கும் இடத்திற்குச் சொல்வது. பள்ளி வாசல் என்பது முஸ்லீம்கள் தொழும் இடத் திற்குச் சொல்வது. இதற்கும் அதற்கும் வித்தியாசம் இல்லாத நிலையில் எழுதப்பட்டிருக்கிறது. இந்தமாதிரியான குறைபாடுகள் இந்த ஆண்டு மட்டும் அல்ல. சென்ற பல ஆண்டுகளிலும் இருந்து வந்திருக்கின்றன. நாங்கள் பல தடவை அரசாங்கத்தின் கவனத் திற்குக் கொண்டுவந்திருக்கிறோம். இதற்கு இதுகாறும் ஒரு நியாயமும் கிடைக்கவில்லை. இதை அரசாங்கம் கவனித்து குறை பாட்டை நீக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். டெக்ஸ்ட் புக் கமிட்டியில் இஸ்லாமிய மத அடிப்படையை உணர்ந்த முஸ்லீம் ஒருவரை அங்கத்தினராகப் போடுவதன்மூலம் தான் இம்மாதிரியான குறைபாடுகளை நீக்கமுடியும் என்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

3-20 p.m. இந்த நாடு சுதந்திரம் அடைந்து பதினைந்து ஆண்டுகள் ஆயிற்று. ஆனால் இந்த நாட்டில் வாழும் முஸ்லீம்கள் ஒரு நிம்மதியான வாழ்வு இல்லாத நிலையில் இருக்கிறார்கள். நாட்டில் உயர்ந்தவர்கள் தாழ்ந்தவர்கள் என்ற ஜாதிப்பாகுபாடுகள் இருந்து வருகின்றன. இன்று நேற்று அல்ல. பல நூற்றாண்டுக ளாக இருந்து வருகின்றன. இந்த அரசாங்கம் பொறுப்பு ஏற்ற பிறகு இத்தகைய வித்தியாசங்கள் மக்களிடையே இருக்கக் கூடாது. எல்லா மக்களையும் சம அந்தஸ்தில் வாழவைக்க வேண்டும் என்ற கொள்கையை நிர்ணயித்துக்கொண்டு, தாழ்த்தப் பட்டவர்கள் உயர்த்தப்பட்டால்தான் அந்த நிலைமை மாற முடியும் என்று உணர்ந்து அதற்காக தாழ்த்தப்பட்டவர்களுக்குத் தனிப் பட்ட பல சலுகைகள் கொடுத்து அவர்களை உயர்த்திக்கொண்டு வருகிறார்கள். இந்த முயற்சி மிகவும் பாராட்டத்தக்கது, வர வேற்கத்தக்கது. இந்த முயற்சியின் காரணமாக தாழ்த்தப்பட்ட வர்கள் நிலை உயர்ந்திருப்பது கண்டு மனமார மகிழ்கிறேன். ஆனால் இதில் ஒரு துக்ககரமான அம்சம் கலந்திருக்கிறது. அது என்ன வென்றால் அவர்கள் காலி செய்து விட்டு மேலே சென்ற காலி ஸ்தானங்களில் முஸ்லீம்கள் நிரப்பப்படுகிறார்கள். தாழ்த்தப் பட்டவர்கள் மேம்பாடு அடைந்து கொண்டிருக்கிறார்கள். அதே சமயம் முஸ்லீம்கள் தாழ்ந்துகொண்டே வந்திருக்கிறார்கள். இது மறுக்கமுடியாத உண்மை. இந்த நிலையை மாற்றியாக வேண்டும். முஸ்லீம் லீகைச் சேர்ந்த நாங்கள் மட்டும் சொல்லு கிறோம் என்பதல்ல, நேஷனலிஸ்ட் முஸ்லீம்கள் என்று சொல்லக் கூடிய அரசாங்க ஆதரவைப் பெற்றவர்கள், சமீபத்தில் கூட்டிய மகாநாட்டில், 'முஸ்லீம்கள் தாழ்ந்த நிலையில் வாழ்கின்றார்கள், அவர்களுடைய அந்தஸ்து உயர்த்தப்படவேண்டும்', என்று தீர்மானங்கள் போட்டிருக்கிறார்கள். அரசாங்கத்திற்கு வேண்டிய வர்களே அரசாங்கத்திற்குக் கசப்பான ஒரு விஷயத்தைச் சொல்லி யிருக்கிறார்களென்றால் அதில் எந்த அளவுக்கு உண்மை அடங்கி யிருக்கும் என்பதைச் சாதாரணமாக எல்லோரும் புரிந்துகொள்ள முடியும். முஸ்லீம்கள் மிகவும் பிற்போக்கான நிலையில்

5th July 1962] [திரு. கே. எஸ். அப்துல் வகாப்]

இருக்கிறார்கள். அவர்கள் அந்தஸ்து உயர்த்தப்படவேண்டுமானால் தமிழ்நாட்டிலுள்ள எல்லா முஸ்லீம்களையும் பிற்பட்டவர்கள் என்று பிரகடனப்படுத்தவேண்டும். தாழ்த்தப்பட்டவர்களுக்குக் கொடுக்கப்படக்கூடிய சலுகைகள் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டு முஸ்லிம்களின் நிலையை உயர்த்த சர்க்கார் சிரத்தை எடுத்துக் கொள்ளவேண்டும் என்று பணிவோடு கேட்டுக்கொள்கிறேன். பட்ஜெட்டில், டெக்னிகல் படிப்புக்காக முன்பு கெஜெட்டுப் பதிவில்லா உத்தியோகஸ்தர்களின் பிள்ளைகளுக்கு கடன் கொடுக்கப் போவதாக இருந்த பழக்கத்தை எல்லாப் பிள்ளைகளுக்கும் அவர்களுடைய ஈட்டின்பேரிலேயே கடன் கொடுக்கும் ஒரு திட்டத்தை அமைத்திருப்பதாக அமைச்சர் படித்தார். இது மிகவும் பாராட்டக்கூடிய திட்டம். இந்தத் திட்டத்தை டெக்னிகல் படிப்பு அளவில் வைக்காமல் காலேஜுகளில் படிக்கும் எல்லா ஏழை மாணவர்களுக்கும் அவர்களுடைய ஈட்டின்பேரிலேயே கடன் கொடுத்து உதவினால் மிகுந்த பலன் அளிக்கக்கூடியதாயிருக்கும் என்று என்னுடைய அபிப்பிராயத்தைக் கூறிக்கொள்ளுகிறேன்.

நூற்றைம்பது ரூபாயுக்குக் கீழ்பட்ட அரசாங்க சிப்பந்திகளுக்கு ஐந்து ரூபாய் உயர்வு கொடுத்திருப்பதைப் பாராட்டுகிறேன். இதற்குக் காரணம் மாகாணச் சிப்பந்திகளுடைய சம்பளத்தை ஐந்து ரூபாய் உயர்த்திக்கொடுத்து மத்திய சிப்பந்திகள் நிலைக்கு சமமாக கொண்டுவர கொடுக்கப்பட்டிருக்கிறது என்று பட்ஜெட்டில் சொல்லப்பட்டிருக்கிறது. முன்னூறு ரூபாய் வரை சம்பளம் வாங்குகிற சிப்பந்திகளுக்கெல்லாம் மத்திய சர்க்கார் பத்து ரூபாய் உயர்த்திக் கொடுத்திருக்கிறது. அந்த அளவிற்கு உயர்வு நமது மாகாண சர்க்கார் அளிக்கவில்லை. இந்த மாகாண சிப்பந்திகள் கோடீஸ்வரர்கள் அல்ல. அவர்களுக்கும் அந்தச் சலுகைகள் கொடுத்து அந்த நிலையில் உள்ள மத்திய சர்க்கார் சிப்பந்திகளுக்கு உள்ள சம அந்தஸ்து கிடைக்கும்படி அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

SRI L. S. KARAYALAR : Mr. Deputy Chairman, I rise to congratulate the Hon. the Finance Minister on the presentation of his first budget. Not because this is his first budget. We know that the Finance Minister has handled several departments efficiently with clarity of vision and soundness of judgment and with a temperament which is always equanimous. Nothing is new to him; except probably in the framing of the budget he has taken a greater part than others. I congratulate him because the budget has reached Rs. 100 crores for the first time. The Finance Minister's predecessor, who is now the Minister for Steel at the Centre, was fondly hoping and, in fact, expressed it in one of his speeches that the budget should reach the Rs. 100 crore mark. This was his ambition. This ambition has been realised by his successor, though it might be by additional taxation measures. (The Hon. Sri M. Bhaktavatsalam : Even without them). It is all the more a matter for congratulation. The 3-30 p.m.

Finance Minister has to be congratulated doubly for this. Sir, I am glad to associate myself, as I said before, in this budget debate.

Sir, the first point I would like to make is about the Finance Commission's allotment to the State. The Finance Commission in their re-allocation, as was answered by the Hon. the Finance Minister yesterday in reply to a question, has reduced in two out of three cases the percentage of allotment. I will stand corrected if I am wrong. The present allotment goes according to population. It is 80 per cent according to population and 20 per cent according to collections. I would like to impress upon the Hon. Minister through you, Mr. Deputy Chairman, that if this method of allotment is to be accepted, and, of course, it has got to be accepted without demur, our State stands to lose. As I said yesterday our State has been doing well in family planning. I said yesterday that population in Madras City had not increased as much as it should or as much as other bigger cities had done, for example like Calcutta or Delhi or Bombay. Delhi is going apace as far as the population is concerned. As far as Bengal is concerned, the population is increasing by leaps and bounds; not because of the refugees. But anyway it is increasing. I would not go into the question as to how it is increasing. But the population increase in Madras City is not so much. (Sri K. Anbazhagan: Area also has increased). That does not count. Not only Madras City, but the entire State has been doing very well in family planning. The increase is not very much. I am glad that the Industries Minister nods his head and approves of what I say. If it is to be on the 80 per cent population basis only, we will get much less, and as we go on, we will get less and less. Therefore, this Government should insist on the Central Government that this formula may be slightly changed. As a matter of fact, I would even suggest that for those who have been doing family planning work well, a certain percentage may be reserved so that they can do it still better.

Mr. Deputy Chairman, as far as the State's finance is concerned, it is always a matter for congratulation, because it has been expanded, it has been tended, and it has been cared for by an eminent Minister who was in charge of it for the last ten years. In his successor, we have got a still more eminent Minister for he had been in the Cabinet for well nigh sixteen years, if I am not wrong. His experience is so wide, and his conduct of affairs so nice that I am sure that he will conduct the finances of this State in a much better way than any of his predecessors.

It is a good thing that the Minister combines in himself not only the finance portfolio but also the education portfolio. But as far as education is concerned, the medium of instruction has been mentioned. It has become a controversial subject in this State. There are eminent Members representing teachers, and the Leader of the Opposition himself is an eminent educationist. There are Members who are well qualified to express their views

5th July 1962] [Sri L. S. Karayalar]

in the filed of education. Nevertheless, I would also like to say a few things about the manner in which education is being handled. This is the time when students go out for admission in colleges. I would plead for more co-ordination between the University and the Government. Just at the moment students are appearing for interviews for admission into the Medical and Engineering colleges. All admissions in the Arts Colleges close to-day. Students get admission in the Arts colleges first. They pay their fees, and some have even to buy the books. They then get admission cards from the Medical college or the Engineering college. Several Arts colleges require the applicants to answer in the admission forms whether they have applied to the Engineering or the Medical college. I do not know why there should be a column like this in the application form for admission in the Arts colleges. If the student answers that he has applied for admission in the Engineering or the Medical college, he is straightway refused admission in the Arts college. Probably the students are cleverer. I think most of them would not say that they have applied to the Engineering or the Medical college. After all, it is not very wrong, because they do not know whether they will get admission at all in the Engineering or the Medical college. I ask, why not co-ordinate the admissions in the Arts, Engineering and Medical colleges? Why not the admissions in the Engineering and Medical colleges close a few days earlier than the Arts colleges? Then the students who have not secured admission in the Engineering or the Medical college can get into the Arst colleges without much difficulty and without paying fees. They need not apply for refund of the fees already paid. In the case of Government colleges, the fees are returned, but in most of the management colleges, the fees are not returned to the candidates. The Government may consider the point I have put forth.

As far as elementary education is concerned, we find in Madras City several schools under different agencies. There are the Corporation schools, the mission schools, and the other management schools. Any one passing by Mount Road at 5 o'clock in the evening near the Church Park Convent school will find a huge number of cars—beautiful limousines—flying to Tondiarpet in the North and Adyar in the South. Why not have regional schools? Why not instructions be issued to the managements of these schools that only people in the locality should be admitted? Then there is the difficulty of the medium of instruction. Some want English to be the medium of instruction, others want Tamil, and some others want the regional language. I want to say one thing definitely, that is, this State should go in for the regional language as the medium of instruction. Recently I found that in the fourth and fifth classes, English is to be made compulsory. The Hon. the Minister for Education will please enlighten me whether there is any country in the world in which any language except the regional language is made compulsory. I will stand corrected if I am wrong. Perhaps it is so in the Central African countries

[Sri L. S. Karayalar] [5th July 1962

where languages have not developed. Only in the regional language, the pupils get proper education. If the regional language is to be voted down in favour of some other language, then it will be a great handicap on the children. Recently I saw a statement by the Union Minister for Education that he proposed to start schools run by the Central Government in which both Hindi and English would be the media of instruction. What I would suggest as the medium of instruction is the regional language. We can have some other language probably Hindi or other language which is nearer to the regional language. The children should hear the noise of the language in which it is educated. Let any one go to any village far flung in our State. Does the child hear the English language at all? It hears Tamil. Probably it hears Telugu a little. Likewise a Kanarese child may hear some Malayalam. No child in any village hears English spoken at all. I would suggest, therefore, that the regional language should be the medium of instruction as far as the elementary schools are concerned. If only this Madras City could be taken up as a sort of experiment and then divided into as many zones as there are Corporation Divisions, and if we put in a rule that the children in a particular zone should get admission only in the schools in that locality, there will be no rush in cars and buses to the different schools in the different localities. Much of the traffic trouble between 8 and 10 in the morning and 4 and 6 in the evening also can be avoided.

Sir, in the mufassal also we find now a large number of elementary schools coming up. I am all for education, more and more elementary schools, secondary schools, colleges, and technical schools. Are we going in the right direction, is the question. I have great admiration for Mr. Sundaravadivelu, Director of Public Instruction. He is very enthusiastic. He wants more schools and still more schools. But I know that there are secondary schools wherein the strength is less than 100. I know also elementary schools wherein the strength is less than 30. In the case of cinemas and buses, we put a limit on their number in a particular locality. But we have no such restriction in the case of schools in any particular locality. We have no survey in the matter. We have got one techno-economic survey in the State. Some sort of survey like this for elementary education, secondary education, technical education, social education, etc., in a particular district, we should have, so that we can delimit the number of schools in any one locality. Now we have a school in one area. Within two miles of this school, there is another high school. I do not say that they are there according to the whims and fancies of the departmental head or the Minister. But they are there because of pressure. Some people want some school even if there is already a school nearby. Another person wants another school, and another school is opened. We must pinpoint those areas where we must have elementary education. We must impose some distance limit between one school and another. When we can impose a limit with reference to the

5th July 1962] [Sri L. S. Karayalar]

number of cinemas in a locality or the number of buses in a particular route, why not we have a limit on the number of schools within a particular area? We should have a limit on the number of elementary schools, secondary schools, technical schools, etc., in a locality. Thereby we can ensure that schools are economic, and we can also get the return for the money that we spend. In the case of schools which have a strength of less than 100, certainly we do not get sufficient return for the money 3-40 p.m. we spend thereon. Like that the schools should be organised on a regional basis, after a survey of districts. They can start it in some district in the extreme south, say Kanyakumari or Tirunelveli. They can estimate the number of elementary schools that will be finally required for the district, the number of secondary schools and the number of other schools that will be required for that kind of regional administration.

Then, I would like to say a few words about the Medical Department. The Medical Department has often been referred to by the hon. the Leader of the Opposition. I think it is his close preserve. With bated breath, I fear to tread on his ground. But only one thing I would say. I would plead for a little more allotment for the Medical Department, because it has always been treated, as the Leader of the Opposition used to say, as the Cinderella of the Government departments. He used to make a distinction between the Health Minister and the Medical Department. He used to say that the Health Minister had got a much more powerful department than the Medical Department. We have got more hospitals. Beautiful hospitals are coming up everywhere, in Chingleput and Tirunelveli. There are lovely hospitals coming up. More doctors are also coming in. I would plead for a little more allotment to the Medical Department.

Then, I would like to address a word through you, Mr. Deputy Chairman, to the new Minister for Municipal Administration. Young and enthusiastic, he has been going about both in and out of Madras incognito. I like it very much. The other day he visited the Kotwal Bazaar and tried to find out the way in which business was being carried on there. But I do not know whether, if he had announced himself as Minister, he would have found his way into the Kotwal Bazaar, because the crowd is so much there. I should congratulate him on getting into it because the crowd there is so much that it is not possible to get in or get out especially in the morning hours. I do not know what hours he chose to visit the Kotwal Bazaar. It is right in the centre and it causes so much of traffic trouble in the City. It has been referred to before, I think, in this House that much of the traffic trouble in Broadway and Loane Square could be solved if Kotwal Bazaar is reduced in status, if I might use the word. If we have a few other bazaars like that, three, four, six or eight thrown all over the City, much of the traffic trouble there could be reduced. I hope the new Minister, enthusiastic, clever and hard-working as he is, will devote his attention to it because his portfolio is

[Sri L. S. Karayalar] [5th July 1962

such that it would not occupy all the 24 hours of his time. He can devote some time to matters like this. It will be very useful and he would have left a name when he leaves the Cabinet which will be ineffaceable.

One other topic I would like to refer to in this connection is about the Legislature Hall. It has been referred to again and again. We want a more commodious hall. We want some place to rest, some sort of lounge. We have got a little room there with a few chairs. I should congratulate the Chairman, the Deputy Chairman, the Secretary of the House Committee, and all those people responsible on having got that room. But it is in a place which is the last place to which legislators would go because practically there are no windows and the place is so stuffy. I would plead that we have a lounge, a very decent lounge. The Hon. the Minister for Industries has gone overseas and visited the United Nations. He has seen how beautiful and fine lounges are there for the Members of the Legislature. This hall is also very cramped. We see visitors here. We see that when some people want to come in, some others have got to be got out. Then only other people can come in. Somebody is very much interested in a speech or somebody wants to hear the speech continuously. Then some are let out and some others are let in. Therefore, one cannot sit and see for long. Why should not this Legislative House be air-conditioned? I have visited several of the departmental offices. Especially in summer the condition is so bad. Why should not this House be air-conditioned? I think the Minister need not be afraid at all of air-conditioning it. It is an absolute necessity in these days. The Government of India Officers, even 'chota' officers in Madras are having air-conditioned rooms. If the Government of India can do it, certainly the Government of Madras can do it. They should start with the Secretariat, first with the Minister's room. I am sure they can work more efficiently under air-conditioned system because, it gives a little more comfort. A little more of comfort means a lot more of work. That is how it should proceed.

Mr. Deputy Chairman, I would like to congratulate again the Finance Minister on his very able budget. Probably he might be under the impression that I am not talking about the taxes. I welcome all of them.

திரு. கே. ஆர். ராமசாமி: மதிப்புக்குரிய சட்ட மன்ற துணைத் தலைவரவர்களே, இந்த நிதி நிலை அறிக்கையை வரவேற்றுப் பேச முடியவில்லையே என்று எனக்கு எற்பட்ட வருத்தத்தைவிட, இந்த அறிக்கையில் நாட்டின் அவல நிலையைப் போக்கவும், எற்கனவே வரிச் சுமை தாங்க முடியாமல் வதைந்து கொண்டிருக்கும் எழை பாட்டாளி மக்களுக்கும், நடுத்தர மக்களுக்கும் மேலும் வரிச்சுமையை எற்றும் அம்சம் இருப்பது கண்டு, இந்த நாட்டு மக்களைப் போலவே எனக்கும் இந்த ஆட்சியின் மேல் அவநம்பிக்கை உண்டாகிறது.

5th July 1962] [திரு. கே. ஆர். ராமசாமி]

இந்த மாமன்றத்தில் வீற்றிருக்கும் நிதியமைச்சரவர்களும், தொழிலமைச்சரவர்களும் நல்ல திறமை வாய்ந்தவர்கள். நெடுங் காலமாகஆட்சியிலே இருந்து வருபவர்கள். அவர்களுக்குத் திறமையில்லை என்று அவர்கள் கட்சியிலுள்ளவர்கள் சொன்னாலும், எதிர்க்கட்சியிலுள்ள நாங்கள் நிச்சயமாக அதை ஏற்றுக்கொள்ள மாட்டோம். நல்ல திறமை இருக்கிறது. நல்ல அனுபவம் இருக்கிறது. ஆனால் அதைப் பயன்படுத்த முடியாமல், விடாமல், ஒரு சக்தி—ஒரு மனித சக்தி என்றே வைத்துக்கொள்ளுங்கள்—அவர்களின் இரு கைகளையும் கட்டி இருக்கின்றது. அந்தக் கட்டுகள் என்று அவிழ்க்கப்படுமோ அன்று நிச்சயமாகத் தமிழகம் சீரான நிலைக்கு வரும் என்று எண்ணுகிறேன். ஆகவே, நான் சொல்வதிலே அமைச்சர்களைச் சொல்வதாக யாருமே கனம் அங்கத்தினர்கள் எண்ணக்கூடாது என்று பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன். 3-50 p.m.

மத்திய சர்க்காரின் வற்புறுத்தலின் பேரிலேயே புது வரிகளைப் போடுகிறீர்கள். அதிகமாக வரி வசூலித்துக் கொடுக்கும் சர்க்கார் என்று டில்லி தட்டிக் கொடுக்க வேண்டுமென்று விரும்புகிறீர்களே தவிர, மக்களை வாட்டி வதைக்காமல் வாழவைத்து மக்களுடைய மதிப்பைப் பெறவேண்டும் என்ற எண்ணம் உங்களுக்கு இல்லை. உங்களை நம்பி வோட்டுப் போட்ட மக்களிடம் 'இத்தனை புது வரிகள் போடப்போகிறோம்,' என்று தேர்தலின்போது சொன்னீர்களா? இன்னும் 5 வருஷத்துக்கு மக்களைப்பற்றிக் கவலையில்லை என்ற நினைப்பில் இப்படி வரி போடுகிறீர்கள். எது எதற்கோ இம் மன்றத்தில் சிலர் சவால் விட்டுப் பேசுகிறார்கள். இப்போது நான் சொல்கிறேன். 'உங்களுக்கு நம்பிக்கை—தைரியம்—இருக்குமானால், இப்போதுள்ள வரிகளை—குறிப்பாக அதிலும் நிலத்திற்கு போட்டிருக்கிறீர்களே, புதுவரி—இதை மக்கள் ஆதரிக்கிறார்களா என்று பொதுஜன வாக்கெடுத்துப் பாருங்கள்'. ஒரு புறத்திலே டில்லி மத்திய சர்க்கார் வரிமேல் வரி போட்டு வாட்டுகிறார்கள். மற்றொருபுறம் இங்கு நீங்கள் 7 கோடி ரூபாய்க்கு வரி போடுகிறீர்கள். இப்படி ஒரு இடுக்கித் தாக்குதலில் சிக்கி மக்கள் அவதிப்படுகிறார்கள். 'பொதுவாக இன்று செலவு அதிகமாகப்போகிறது. இதற்கு வரி போடாமல் என்ன செய்கிறது?' என்று கேட்கிறார்கள் மந்திரிகள். வரி மூலமாக இதற்கு வழிதேடுவதென்றால், மக்கள் எத்தனை தூரம் வேதனை அடைவார்கள்? ஒரு புறத்தில் செலவு செட்டாக—சீராக, சிக்கனமாக இருக்க வழிகள் கண்டு பிடிக்கவேண்டும். மற்றொரு புறத்தில் வருவாய் தரத்தக்க தொழில்களை சர்க்காரே ஏற்று லாபம் . . .

**திரு. கே. வி. ராமசாமி:** ஆன் எ பாயிண்ட் ஆப் ஆர்டர் ஸார். கனம் அங்கத்தினர் எழுதிப்படிக்கிறார். படிக்கலாமா?

**திரு. கே. ஆர். ராமசாமி:** இல்லை, இல்லை. இது நோட்ஸ் தான். சர்க்கார் இரண்டு காரியம் செய்யாமலிருக்கிறார்கள். லாபம் தரும் தொழில்களை எல்லாம் முதலாளிகளுக்குக் கொடுத்தால் சர்க்காருக்கு லாபம் எப்படி வரும்? வருமான வரி

கிடைக்கிறது என்று அமைச்சர்கள் பாலபாடம் போதிக்கிறார்கள். வருமான வரி கொடுக்காமல் ஏமாற்றுகிறவர்களைப் பற்றியும், அந்தத் தொகை ரூ. 400 கோடி இருக்குமென்றும் பேராசிரியர் Kaldor சொன்னாரே. அதை, நாடு நன்றாக அறியுமே. ஏழைகளைக் கசக்கிப்பிழியும்போது கண்டிப்பு காட்டும் சர்க்காருக்குப் பணக்காரர்கள் விஷயத்தில் ஏன் அந்தக் கண்டிப்பு ஏற்படவில்லை என்று கேட்க ஆசைப்படுகிறேன். சவுக்கு மரத்திற்கு எவ்வளவு தான் சந்தணத்தைலம் பூசினாலும் அதைக்கொண்டு சந்தணத் தைலம் எடுக்க முடியாது. அடிப்படையில் முதலாளித்துவத்தை வைத்துக்கொண்டு, அதன் மேலே சமதர்ம தைலத்தைத் தடவி "பாருங்கள், எவ்வளவு வாசனையாக இருக்கிறது" என்று கூறுகிறீர்கள்.

பஸ் தொழிலைத் தேசிய மயமாக்கப் போகிறோம் என்று பேசிக்கொண்டிருந்தீர்கள். இப்போது பஸ் முதலாளிகளின் நேசமும் பாசமும் உங்களுக்குத் தேவை. அது செவ்வையாக மாறி விட்டது. ஆகவே, பஸ் தொழிலை சர்க்கார் எடுத்து நடத்தப் போவதில்லை என்று சொல்கிறீர்கள். பருத்தி ஆலைகள், சிமெண்ட் தொழிற்சாலைகள், சர்க்கரை ஆலைகள், பஸ் தொழில் இவ்வளவும் முதலாளிகள் வீட்டுத் தொழுவத்தில். உங்களிடம் அப்பளத் தொழிற்சாலையும், செருப்புத் தொழிற்சாலையும். இதுதான் சமதர்மமா? விலைகளைக் கட்டுப்படுத்த முயற்சிக்கவில்லை. இந்தத் தொல்லைகளால் அவதிப்பட்டுக் கொண்டிருக்கும் ஏழைகள் மீது வரிபோட்டு வதைப்பது தருமம் ஆகாது. வருவாய் உயர வேறு வழி தேடுங்கள். ஏழைகளை நசுக்கும் வரிகளை நீக்குங்கள் என்று கேட்டுக்கொள்கிறேன். நமது நாடு தொழில் வளர்ச்சி பெறுவதற்கு மத்திய சர்க்காரிடம் போராடவேண்டும். இப்படிச் சொன்னால் கேலி பேசுகிறீர்கள். ஆனால் 2 நாட்களுக்கு முன்பு ஆந்திர நாட்டு அமைச்சர் ஒருவர் பேசுகிறார் "மத்திய சர்க்கார் மாற்றாந்தாய் போக்கில் செல்கிறது . . .

**திரு. கே. வி. ராமசாமி:** இரண்டொரு பாயின்ட் சொல்வார் என்று நினைத்தேன். பூராவும் எழுதிப்படிக்கிறார்.

**திரு. கே. ஆர். ராமசாமி:** இல்லை, பாயிண்ட்ஸ்தான். சரி கீழே வைத்துவிடுகிறேன்.

இப்படிப்பட்ட தொழில்களை சர்க்கார் ஏற்று நடத்தினால். நல்ல முறையில் லாபம் கிடைக்கும். ஆகவே அப்படிப்பட்ட லாபம் தரும் தொழில்களை சர்க்கார் ஏற்று நடத்தாமல், பணக்காரர்களைப் பேணி அவர்கள் நட்பும் சகவாசமும் வேண்டுமென்ற எண்ணம் காரணமாக, இன்றைய தினம் இந்த அரசாங்கம் இந்தப் போக்கில் செல்லுகிறது. இந்த ஸ்தாபனம்—காங்கிரஸ் என்ற ஸ்தாபனம் எப்படி எப்படி ஒரு காலத்தில் இருந்தது, இன்று எப்படி இருக்கிறது என்பதைப்பற்றி உங்களிடையே நான் பேசுவதைவிட, ஒரு புனித ஆத்மா, நாடு விடுதலை அடைய வேண்டுமென்று விரும்பியவர் வருத்தப்பட்டு, நொந்த உள்ளத்தோடு தன்னுடைய பத்திரிகையில் எழுதியதைப் படிக்கிறேன்.

5th July 1962] [திரு. கே. ஆர். ராமசாமி]

" கடந்த 60 ஆண்டுகளுக்கு மேல் மிக எளிய முறையில் ஆரம்பிக்கப்பட்ட காங்கிரஸ் கட்சி, பல லட்சக்கணக்கான மக்களால் பின்பற்றப்படும் மாபெரும் இயக்கமாக வளர்ந்துள்ளது. பல கஷ்ட நஷ்டங்களை அனுபவித்து வளர்க்கப்பட்ட இந்தக் கட்சி பதவி ஏற்றபின் தன்னுடைய . . . நோன்பு ஆகியவற்றிலிருந்து விலகிச் செல்வதைப்பற்றிக் கேள்விப்படுகிறேன். இது சுயநலக்காரர்கள், பதவி வேட்டைக்காரர்கள் சேருமிடம் ஆகிவிட்டது. பல ஆண்டுகளாகச் சேவை செய்த காரணத்தால் காங்கிரசுக்கு மக்களின் நம்பிக்கை கிடைத்தது. அந்தக் காங்கிரஸ் எல்லாவற்றையும் பணக்காரர்களுக்கு ஒப்படைக்கும் நிலை ஏற்படுமோ என்று அஞ்சுகிறேன்" என்று எழுதினர் காந்தியார் அவர்கள் 1—6—47 ஹரிஜன் பத்திரிகையில்.

உலகுக்கு உழைத்த உத்தமர் மிகமிக வேதனைபட்டு நொந்த உள்ளத்தோடு எழுதியிருக்கிருர். 16 ஆண்டு காலத்திலே எடுத்துப் பார்த்தால், எவ்வளவு நாம் செயலற்றவர்களாக இருந்திருக்கிருேம் என்பது தெரியும். அப்படிச் செயல்பட முடியாமைக்கு ஏதோ ஒரு காரணம் நம்முடைய அமைச்சர்களுடைய கைகளைக் கட்டிவிட்டிருக்கிறது என்பதை நன்ருகச் சிந்தித்துப் பார்த்தால் தெரியும். இரண்டு மூன்று தினங்களாக சட்டசபையிலும் இங்குமிருந்து நடந்த நிகழ்ச்சியெல்லாம் பத்திரிகையில் பார்த்தேன். ஒரு சிலர் ஆண்களைச் சமையல் கற்றுக்கொள்ளச் சொல்கிருர்கள். ஒரு பெண் குடுகுடுப்பைக்காரர்கள் என்று சொல்கிருர்கள். ஒருவர் மூன்று நான்கு படி அரிசி கொடுப்போம் என்று வாயால் அளந்தால் போதாது என்று சொல்கிருர். அவர்கள் திறமையைக் காட்டுவதற்கு இப்படிப்பட்ட மாமன்றங்களை உபயோகிப்பதைப் பார்க்கும்போது, மிக வேதனையாக இருக்கிறது. குறிப்பாக ஒரு அங்கத்தினர், மதிப்பிற்குரிய நண்பர் ஜால வித்தைக்காரர்கள் என்று எங்களை மறைமுகமாகக் கூறுவதாக எண்ணிக் கொண்டு பேசினர். உண்மையிலேயே வீதிகளில் ஜாலவித்தை காட்டுகிறவன் கூட ஒரு மாங்கொட்டையை நட்டு பத்து நிமிடங்களில் ஒரு செடியைக் காட்டுவான். ஆனல், நாம் பதினைந்து ஆண்டு காலம் ஜால வித்தைகளைச் செய்தும் எந்தவிதமான பலனும் ஏற்படவில்லை. இவற்றை வேதனைப்பட்டு எடுத்துச்சொல்லும்போது, எங்களை மறைமுகமாகத் தகக்குவதன் மூலம் நாங்கள் அழிந்தொழிந்து விடுவோமா? திராவிட முன்னேற்றக் கழகத்தின் ஒப்பற்ற தலைவர் எங்கள் அண்ணுவின் தலைமையில் வந்தவர்கள் நாங்கள். நாட்டில் ஒரு நல்ல நிலை ஏற்படவேண்டுமென்ற ஒரு மாபெரும் நோக்கத்தின் காரணமாக, நாங்கள் இங்கு பாடுபடுகிருேமே தவிர எங்கள் வார்த்தை ஜாலங்களை காட்டுவதற்கு அல்ல என்பதைக் கனம் அங்கத்தினர்கள் ஒவ்வொருவரும் புரிந்துகொள்வது சாலச் சிறந்ததாகும்.

வித்துவான் டி. முத்துக்கண்ணப்பன் : எங்களுக்கு அந்த ஜால வித்தைகள் தெரியாது.

5-0 p.m.

திரு. கே. ஆர். ராமசாமி : ஜாலவித்தை தெரியாது என்று சொல்வதில் பயனில்லை. ஒரு மதிப்பிற்குரிய அங்கத்தினர் ஒரு பெருந்தியாகி, சத்தியாகிரகத்தில் தடியடிபட்டவர், வப்பு சத்தி

யாகிரகத்தில் பல முறை சிறை சென்றவர் ஒரு கேள்வியைக் கேட்டார். நீங்கள் வந்த வழி வேறு. ஒருவருக்கொருவர் தாக்கு வதில். அர்த்தமில்லே. நாங்கள் சரியில்லே என்று சொன்னுல் அதையே நீங்கள் பின்னுல் சரியில்லே என்று சொல்கிறீர்கள். யார்தான் குற்றம் சொல்லாமல் இருக்கிருர்கள்? முதலில் மந்திரி அவர்களேப் பாராட்டிவிட்டு பிறகு அது செய்யவேண்டும், இது செய்யவேண்டுமென்றுதானே நீங்களும் சொல்கிறீர்கள். இன்னும் வந்துகொண்டிருக்கிற நிலேயைப்பார்த்தால் "தமிழன் என்று சொல்லடா, தலே நிமிர்ந்து நில்லடா" என்று கனம் அங்கத்தினர் நாமக்கல் கவிஞர் ராமலிங்கம் பிள்ளே அவர்கள் பாடலுக்குக்கூட தடை வரலாமோ என்று பயமாக இருக்கிறது. அப்படிப்பட்ட சூழ்நிலே உருவாகி வருகிறது. பாட புத்தகங்களேக்கூட மாற்ற வேண்டுமென்று மத்திய சர்க்கார் நம்முடைய சர்க்காருக்கு உத்திரவு போட்டிருப்பதாகக் கேள்விப்படுகிறேன். "செந்தமிழ் நாடென்னும் போதினிலே, இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே" என்று இனிக்க இனிக்கப் பாடப்பெறும் பாட்டுக் களுக்கும் தடைவருமோ என்று பயப்படக்கூடிய நிலே வந்து விட்டது. 'தமிழன் என்று நீ சொல்,' என்ற நிலேமாறி அது சொல்லக் கூடிய உரிமை பறிக்கப்படுமோ என்று அஞ்சக்கூடிய நிலேயில் இன்று இருக்கிருேம். 15 ஆண்டுகளாக பட்டினி போட்டு விட்டீர்கள். புலவர்களேயும் நல்ல கவிஞர்கள் எழுதியவைகளேயும் ஏன் அழிக்கப் போகிறீர்கள்? நாம் ஒருவருக்கொருவர் விவாதம் செய்து கொண்டு நாட்டிலே உள்ள கேடுகளே நீக்குவதற்குத் தடை யாக நாம் இருக்கக்கூடாது. பிற்காலத்தில் நம் சந்ததிகள் வரப் போகிருர்கள். நாம் என்ன சாதித்தோம் என்று நம் செயல்களேப் பார்க்கத்தான் போகிருர்கள். நம்மை நல்லபடி வாழச் செய்யா விட்டாலும் நாம் பெற்றெடுத்த செல்வங்கள் பிற்காலத்தில் தலே நிமிர்ந்து வாழ்வதற்காக நாட்டைச் செப்பனிட்டு நல்லவைகளேச் செய்வோம் என்று பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன். நல்ல விஷயங்களுக்கு நாங்கள் ஒத்துழைப்பு தருவோம். ஆகவே, நாங்கள் சொல்வதற்காக ஏதாவது மறுப்புச் சொல்லவேண்டுமென் பதற்காக எதுவும் சொல்லவேண்டாம். நான் இடையே எழுதிப் படிக்கிறேன் என்று பெரும் தியாகி கே. வி. ராமசாமி அவர்கள் சொன்ஞர்கள். இரண்டு தினங்களுக்கு முன்பு அவர் பேசும் போது அவர் பேசிய பேச்சுக்களேக் கேட்டேன். எதிர்க்கட்சிக் காரர்களேப் பற்றி அவர்கள் பேசவில்லே. அவர் எப்போதுமே எதிர்கட்சிக்காரர்களேக் கண்டித்துப் பேசி நான் கேட்டதேயில்லே. அந்த எண்ணம் வேண்டும். உள்ள குறைகளே அவர் எடுத்துச் சொல்கிருர். அந்தத் துணிவு வேண்டும் எல்லோருக்கும். எதற் கெடுத்தாலும் பாராட்டிக் கொண்டிருப்பதில் அர்த்தம் இல்லே. நான் வெளியே வந்ததும் அவர்களேக் கண்டு அண்ணு, நீங்கள் இன்று அழகாகப் பேசினீர்கள் என்று பாராட்டுவது என் வழக்கம்.

**வித்துவான் டி. முத்துக்கண்ணப்பன்:** ஒரு ராமசாமி மற்ருெரு ராமசாமியைப் பாராட்டியிருக்கிருர்.

**திரு. கே. ஆர். ராமசாமி:** அவரவர்களுக்குப் பேசத் திறமை இருக்கிறது, உரிமையும் உண்டு. எப்போதும் நல்ல விஷயங்கள் நடக்கும்போது, அவற்றைப் பாராட்டவேண்டும். கெடுதலாக

5th July 1962] [திரு. கே. ஆர். ராமசாமி]

வரும்போது அவற்றைக் கண்டிப்போம் என்று கூறி இவ்வளவு நேரம் பேச வாய்ப்பளித்த சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களுக்கு என் நன்றியைக் கூறி என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

* திரு. ஏ. சுப்ரமணியம்: கனம் துணைத் தலைவர் அவர்களே, இங்கு கொண்டுவந்திருக்கும் 1962-63-ஆம் ஆண்டு வரவு செலவுத் திட்டத்தை மனமாரப் போற்றி வரவேற்கிறேன். இந்த பாரத தேசமானது சுமார் நானூறு, ஐநூறு ஆண்டு காலமாக அடிமைப் பட்டிருந்தது, சமீப காலத்தில், என்னுடைய முஸ்லீம் நண்பர் கூறியவாறு, பதினைறு ஆண்டுகளுக்கு முன்பு சுதந்திரம் பெற்று இப்போது பல நல்லவைகளைச் செய்துகொண்டு வருகிறது. இந்த நிலையிலே பார்க்கிறபொழுது, இங்கு பேசிய பல எதிர்க் கட்சி நண்பர்கள் இந்த வரவு செலவுத் திட்டத்தை, எங்களால் வரவேற்க முடியவில்லை, அதற்கு பல காரணங்கள் இருக்கின்றன, அதை எப்படிப் போற்றுவது, ஆதரிப்பது என்று எங்களுக்குப் புரியவில்லை என்ற பரிதாபகரமான நிலையில் அவர்கள் இருப்பதைக் கண்டு நான் வருத்தமடைகிறேன். இத்தகைய நிலைமை எதிர்கட்சிக்காரர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. சட்டசபை என்றால், அதில் எதிர்கட்சிகள் இருக்கத்தான் செய்யும். ஆளும் கட்சியும் இருக்கிறது. எதிர்கட்சிகள் எப்படி இருக்கவேண்டுமென்று நாட்டிலே பல அறிஞர்கள் மூலமாகவும், வெளிநாடுகளிலிருந்து பத்திரிகை வாயிலாகவும் வெளிநாடுகளுக்குச் சென்றவர்கள் மூலமாகவும் தெரிந்து கொண்டிருக்கிறோம். ஒவ்வொரு கட்சிக்காரர்களும் தனித்தனியாகத் தேர்தலில் நின்று அவர்களுடைய கொள்கைகளை மக்களிடையே கூறி வாக்குகளைப் பெற்று சட்டசபைக்கு வந்து அந்தக் கொள்கைகளுக்காக வாதாடுகிறவர்கள். ஆனால் இந்த பாரத தேசத்திலே அப்படியில்லை. தப்பளம் என்று சொல்வார்கள்,வெண்டைக்காய், பாகற்காய், கத்தரிக்காய் இவற்றையெல்லாம் சேர்த்து கூட்டுகறி செய்து அதற்குத் தப்பளம் என்று சொல்வார்கள். அதுமாதிரி ஒரு கூட்டு சேர்ந்து ஒரு கட்சி என்று வைத்துக்கொண்டு எதிர்கட்சிக்காரர்கள் என்று சொல்லிக்கொள்கிறார்கள் இங்கே. எதிர்கட்சி என்றால் இவர்களை யார் ஒப்புக்கொள்வது? ஒவ்வொருவருடைய கொள்கையும் வெவ்வேறாக இருக்கிறது. அவரவர்கள் ஜனங்களிடத்தில் வெவ்வேறு கொள்கைகளை விதவிதமாக கூறுகிறார்கள். மொத்தமாகச் சேர்த்து இதுதான் எதிர்கட்சி என்று கூறுகிறபோது, இதை எப்படி மக்கள் ஒத்துக்கொள்வார்கள்? சட்டசபையில் உள்ளவர்கள்தான் எப்படி அவர்கள் சொல்வதைக் கொண்டு சட்டம் செய்யமுடியும்? இரண்டு வருஷங்களுக்கு முன்பு இங்கிலாந்து தேசத்திலிருந்து அட்லி பிரபு அவர்கள் இங்கு விஜயம் செய்திருந்தார்கள். நமக்குச் சுதந்திரம் கொடுத்ததில் அவரும் ஒருவர். எல்லா சட்டசபை அங்கத்தினர்கள் சேர்ந்த கூட்டத்தில் நானும் கனம் மாஜி அங்கத்தினர் ரஸாக்கானும் அவர்களைச் சந்தித்தோம். அப்போது ஒரு கேள்வியை அவரிடம் கேட்டோம். அதாவது தொழில் கட்சி அரசாட்சி கவிழ்க்கப்பட்டு, இப்போது கன்சர்வேடிவ்—பிரபுக்கள் கட்சி ஆட்சி நடத்துகிறது, இப்படியே மீண்டும் நீங்களும் அவர்களும்

[திரு. ஏ. சுப்ரமணியம்] [5th July 1962

மாறிமாறி அரசாங்கத்திற்கு வருகிறீர்களே அதில் என்ன ரகசியம் இருக்கிறது என்று கேட்டோம். அவர் சொன்னார் நாங்கள் எதை மக்களுக்குச் செய்ய வேண்டுமென்று சொல்கிறோமோ அதை கன்சர்வேடிவ் கட்சிக்காரர்கள் சொல்கிறார்கள். இன்று காரியத்தில் செய்கிறார்கள். ஆகையால் அவர்களும் ஆட்சிக்கு வருகிறார்கள். யார் இருந்தால்தான் என்ன? எல்லோரும், மக்களும் நல்ல நிலையில் இருப்பதற்குத்தான் சட்டங்கள் செய்கிறோம். அதை யார் செய்தாலும், ஆதரிக்கவேண்டியதுதான். அதே முறையில் இங்கிலாந்து மக்கள் கன்சர்வேடிவ் கட்சியை ஆதரிக்கின்றார்கள். அதேபோல இங்கு பாக்கிறபோது இங்கு ஏதாவது ஒரு கட்சி என்று சொல்லிக்கொண்டு வந்து சட்டதிட்டங்களுக்காக சட்டசபையில் வாதாடினால், அதற்கு அர்த்தம் இருக்கிறது. மக்களும் அதை நம்புவார்கள். இப்போது ஸ்ரீ. ராஜகோபாலாச்சாரி அவர்கள் சுதந்திர கட்சி என்று வைத்திருக்கிறார். தனிப்பட்ட மனிதனுக்குச் சுதந்திரம் வேண்டும், அவனுக்கு இருக்கிற பணமோ, நிலமோ, மற்ற உரிமையோ போக்க கூடாது என்பது அவர் வாதம். அவர்கள் உரிமையை யாரும் தடை செய்யக் கூடாது என்று சொல்கிறார். தவறான முறையில் பணமோ, நிலமோ, மற்ற உரிமைகளோ இருந்தால் இதைத் திருத்தி அமைக்க சட்டம் செய்வது தப்பா? நியாயம் செய்ய அரசாங்கம் பாடுபடுகிறது. இவைகளைக் காப்பாற்ற தனிப்பட்ட சுதந்திரமா? அதை யாராலும் ஒத்துக்கொள்ள முடியாது. அடுத்தபடியாக, திரு. அண்ணாத்துரை இருக்கிறார்கள். அவர் ஒரு கட்சி வைத்துக் கொண்டு அதற்கொரு தலைவராக இருந்துகொண்டு திராவிட நாடு வேண்டுமென்று சொல்லுகிறார். அவருக்கு அப்படிச் சொல்ல உரிமை உண்டு என்பதை ஒத்துக்கொள்ளுகிறேன். ஆனால் அதில் நியாயம் வேண்டாமா? என்னுடைய நண்பர் திரு. கே. ஆர். ராமசாமி அவர்கள் தெரிவித்ததுபோல, எதிர் கட்சி என்றால், அவர்கள் கருத்தை சொல்ல உரிமை இருக்கிறது. ஆனால் அவர்கள் எது நன்மை எது கெடுதல் என்பதைச் சிந்திப்பதில்லை. தமிழ் நாடு ஆந்திரம் கேரளம், கர்னடகம் நான்கும் சேர்ந்து திராவிட நாடு அமைய வேண்டுமென்று சொல்லுகிறார்கள். இது எப்படி அமைய முடியும்? முன்பு இங்கு நான்கு மாகாணத்திலுள்ளவர்கள் ஒன்றுகூடி இங்கே அரசாட்சி செய்தார்கள். அப்போதே திராவிடநாட்டை அமைக்க முடியவில்லை. நாங்கள் சேர்ந்து வாழ முடியாது, தனித்தனியாக வாழப் போகிறோம், ஆந்திரம் 'மனதி' தமிழ் நாடு நம்முடையது, கேரளம் நான் 'பரையரேன்' கன்னடம் 'அல்லி நோடு யோக்குனு' என்று கூறி தனித் தனியாகப் பிரிந்து போய் விட்டனர். இனி எப்படி இவர்களை ஒன்று சேர்ப்பது? இது நடவாத காரியம் அல்லவா? இதை நாங்கள் கேட்கக் கூடாதா? கேட்டால் காங்கிரஸ்காரர்களாகிய நாங்கள் எதிர்க்கிறோம் என்கிறீர்கள். ஒன்றாக இருந்தபோதே முடியாத காரியம், தனித்தனியாகப் பிரிந்து விட்ட பிறகு எப்படி சாத்தியமாகும்? இங்கு சட்டசபையில் இருக்கும் 207 பேர்களில் நான்கில் ஒரு பங்கு அதாவது 50 பேர்கள் வந்திருக்கிறீர்கள். 100 பேர்கள் சரிபாதி பேர்கள் வந்தால், கொஞ்சம் நெருக்கிக் கொண்டு வருகிறார்கள் என்று சொல்லலாம். அந்த level -வில் இல்லாதபோது

5th July 1962] [திரு. ஏ. சுப்ரமணியம்]

தமிழ் நாட்டில் மக்கள் திராவிட நாட்டுத் திட்டத்தை ஒத்துக் கொண்டார்கள் என்று பொருள்? சட்டசபையில் அதைக் கேட்க உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது? மக்கள் அதற்காக உங்களுக்கு வாக்களிக்கவில்லை. நாங்கள் கேட்பதை கேட்கிறோம், நீங்கள் சட்டம் செய்தால் செய்யுங்கள், இல்லாவிட்டால் விட்டு விடுங்கள் என்றால், அதைப்பற்றிக் கேள்வி இல்லை. ஆனால் அதற்காகப் போராடியே தீர்வோமென்றால் அதை நாங்கள் எதிர்த்தே தீருவோமென்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்கிறேன். மக்களுடைய நன்மை, தீமைகளைக் கவனித்து அதன்படி நடந்துகொள்ள வேண்டும். அதைத்தான் நான் சொல்ல விரும்புகிறேன்.

சென்ற கூட்டத்தில்கூட என்னுடைய பழைய நண்பர் கே. ஆர். ராமசாமி அவர்கள் சொன்னார், கலையுலகத்தில் நாங்கள் எல்லாம் கலைஞர்கள் என்று. வாஸ்தவம். நல்ல கலைஞர்கள் இல்லை என்று நான் சொல்லவில்லை. இப்போது சிவாஜி கணேசன் அவர்கள் வெளிநாடு போன மாதிரி இவர்களும் அயல் நாட்டுக்குச் சென்று, அங்கே பல விஷயங்களைத் தெரிந்துகொண்டு வந்து, இங்கே நமக்குச் சொல்ல வேண்டும். இங்கே அட்டைக் கத்தியை வைத்துக் கொண்டு நாடகத்தில் சண்டை போடுகிறோம் என்று அமெரிக்காவில் போய் சொல்லக் கூடாது. இந்தியாவில் நாடகங்களில் உண்மையான கத்தியை வைத்துக் கொண்டு வீரத்துடன், தர்மப்படி சண்டை போடுகிறார்கள். மேலும், இந்திய நாட்டு விடுதலைக்காக ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் போரிட்டு அஹிம்சை முறையில் சுதந்திரம் பெற்றோம், விடுதலைக்கு விரோதமாக நாங்கள் இருந்ததில்லை என்று சொன்னால், அது அல்லவா சுதந்திரம் என்று புகழ்வார்கள். அவ்விதம் சொல்ல வேண்டும். எனக்கும் நாடகம் பார்ப்பதில் நடிப்பதில் 40 வருட அனுபவம் இருக்கிறது. 1921-ம் வருடத்திலிருந்து பல நாடக நடிகர்களை எனக்கு நன்கு தெரியும். அவர்களில் பல சிறந்த நடிகர்கள் இப்பொழுது இல்லை. இறந்துவிட்டார்கள். இப்போது இருக்கும் நவாப் ராஜமாணிக்கம், டி. கே. எஸ். பிரதர்ஸ், சாரங்கபாணி இவர்களை யெல்லாம் எனக்குத் தெரியும். இன்னும் பல நண்பர்களையும் தெரியும். நடிகர்கள் நல்ல நிலைக்கு வர வேண்டுமென்பதில் எனக்கும் அக்கறை உண்டு, ஆசை உண்டு. நாடகத்தின் மூலம் இந்த தேசத்தின் ஒழுக்கம், பண்பாடு, முன்னேற்றம் இவற்றை ஆங்காங்கு மக்களுக்கு நீங்கள் எடுத்துச் சொல்ல வேண்டுமென்று தான் நாங்கள் சொல்லுகிறோம். அதை விட்டு விட்டு எது பேசினாலும் கட்சி நலனுக்காக என்றால், அதில் அர்த்தமில்லை. மற்றொரு விஷயத்தை நான் கேட்கிறேன். ரூபாய்க்கு மூன்று படி அரிசி கொடுப்போம் என்கிறீர்கள். அது எப்படி முடியும்? 4–10 p.m.

திரு. ஏ. கே. தங்கவேலு முதலியார் : எங்கள் மனதில் முடியும் என்று படுகிறது.

**திரு. ஏ. சுப்ரமணியம் :** எனக்குத் தெரியும். 1921-ம் வருடத்தில் போலீஸ்காரர்களுக்கு 17 ரூபாய் சம்பளம்தான் இருந்தது. அவர்களுக்கு அதிக சம்பளம் கொடுக்க வேண்டுமென்று அக்காலத்தில் பல கூட்டங்களில் பேசினவர்களில் நானும் ஒருவன். உபாத்தி

யாயர்களுக்கு 17, 18, ரூபாய் அந்தக்காலத்தில் சம்பளம். இப்போது அவர்களுக்கு 70, 80 ரூபாய் சம்பளம். அவரவர்கள் படிப்புக்கு தகுந்தபடி அதிக சம்பளம் கொடுக்கிறோம். அந்தக் காலத்தில் அரிசி ரூபாய்க்கு 6 படி விற்றது, 17 ரூபாய் சம்பளம் கொடுக்கிறபோது ரூபாய்க்கு 6, 7 படி அரிசி விற்றது. 70 ரூபாய் சம்பளம் கொடுக்கிறபோது ஒரு படிதான் இருக்க முடியும். வாங்கும் சக்தி மக்களிடையே பெருகியிருக்கிறது.

திரு. க. அன்பழகன் : சரியாகக் கணக்குப் போடுங்கள்.

திரு. ஏ. சுப்ரமணியம்: இன்னும் கொஞ்சம் உயர்த்திப் போடுங்கள் என்று சொல்லுங்கள். அதை விட்டு விட்டு, அரசாங்கம் ஒன்றுமே செய்யவில்லை என்றால், யார் ஒத்துக் கொள்வார்கள்? நம்முடைய முஸ்லீம் நண்பர் சொன்னார். முஸ்லீம்களுக்கு இந்த சர்க்கார் நன்மையே செய்யவில்லை என்றார். முஸ்லீம்களுக்கு இந்த அரசாங்கம் நன்மையே செய்ய வில்லை என்றால், ஏற்றுக் கொள்ள முடியுமா? மகாத்மா காந்தி அடிகள் முஸ்லீம்களுக்கு விரோதமாக யார் தவறான காரியத்தை செய்தாலும் அவர்களை எதிர்த்துப் போராட்டம் நடத்தி இருக்கின்றார். இந்திய மக்கள் பெரும்பான்மையோர் அவரோடு சேர்ந்து நின்று முஸ்லீம்களின் நன்மைக்காக சண்டை போட்டு, அடிபட்டு, தூக்கு மேடை ஏறியிருக்கிறார்கள். எத்தனையோ முஸ்லீம்கள் அகில இந்திய காங்கிரசு கமிட்டித் தலைவர்களாக இருந்திருக்கிறார்கள். மௌலானா மஹமத் அலி, சவுக்கத் அலி, அபுல் கலாம் ஆஜாத், அன்சாரி, ஹகீம் ஆஜ்மால்கான், கபார் கான், அஸப் அலி போன்ற எத்தனையோ முஸ்லீம்கள் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் தலைவராக இருந்திருக்கிறார்கள். இப்போது எடுத்துக்கொள்ளுங்கள். ஒரு மரைக்காயர் அம்மையாருக்கு (Director of Medical Services பதவி கொடுத்திருக்கிறார்கள், அது மட்டுமல்ல. சர்விஸ் கமிஷன் மெம்பராக ஜனப் அல்லாபிச்சை என்ற முஸ்லீம் நண்பர் நியமிக்கப்பட்டிருக்கிறார். ஜனப் பஷீர் அஹமத் சையத் அவர்கள் நீதிபதியாக இருந்திருக்கிறார்கள். இன்னும் எத்தனையோ கலெக்டர்களாகவும், போலீஸ் சூப்பிரண்டெண்டுகளாகவும் இருந்திருக்கிறார்கள். நாங்கள் வந்ததால்தான் இதையெல்லாம் செய்தார்கள் என்கிறார்கள் நண்பர்கள். இதெல்லாம் 2, 3 வருடங்களுக்கு முன்னாலேயே முஸ்லீம்களுக்குச் செய்யப்பட்ட நன்மை. நாங்கள் சொல்லிவந்தால்தான், மஜீத் அவர்களை அமைச்சராகப் போட்டிருக்கிறார்கள் என்கிறார்கள். காங்கிரசு அரசாங்கம் நீங்கள் சொல்லுவதற்கு முன்பே, முஸ்லீம்களுக்கும், இதர மைனாரிடிகளுக்கும் செய்ய வேண்டிய நன்மைகளைச் செய்து கொண்டிருக்கிறது. இன்னும் கொஞ்சம் அதிகமாகச் செய்யுங்கள் என்று கேட்டால் அர்த்தமிருக்கிறது. அழுத பிள்ளைதான் பால் குடிக்கும். அதை விட்டு விட்டு ஒன்றுமே செய்யவில்லை என்று சொல்லாதீர்கள். மேலும், மோசமான வார்த்தைகளை சட்டசபையில் பேசாதீர்கள். 16 ஆண்டுகளாக என்ன செய்து விட்டார்கள் என்று கேட்கிறீர்களே, நான் சவால் விட்டுக் கேட்கிறேன். 1947-ல் சுதந்திரம் வந்தது. 1947-ல் எவ்வளவு ஆரம்பப் பள்ளிக் கூடங்கள், எவ்வளவு உயர்தரப் பள்ளிக்

5th July 1962] [திரு. ஏ. சுப்ரமணியம்]

கூடங்கள். எவ்வளவு கல்லூரிகள், எவ்வளவு தொழிற் கல்லூரிகள் இருந்தன? இப்போது எவ்வளவு இருக்கின்றன? அப்போது நெய்வேலித்திட்டம் உண்டா, குந்தா திட்டம் உண்டா? ஒஹேனக்கல் திட்டம் உண்டா? ஏழு அணைக்கட்டுக்கள் கட்டப்பட்டிருக்கின்றன, அப்போது உண்டா? ஏதோ தப்பித்தவறி மேட்டூர் அணை கட்டப்பட்டுள்ளது. அன்று நெய்வேலி பாலைவனமாக இருந்தது. இன்று அங்கே பத்தாயிரம் பேர்களுக்கு மேல் வேலை செய்கிறார்கள். இன்று எங்கே பார்த்தாலும் தொழிற்சாலைகள், தொழிற்பட்டறைகள் இருக்கின்றனவே. உலகம் போற்றும் வகையில் துரிதமாகச் சென்ற பதினைறு ஆண்டுகளில் இவ்வளவு முன்னேற்றம் அடைந்திருப்பதைக்கண்டு ஒவ்வொரு தேசமும் வாழ்த்துகிறது. என்ன நாங்கள் செய்யவில்லை என்று நீங்கள் சொல்லுங்கள். நாங்கள் கூறுகிறோம் செய்த காரியங்களை. ஆசிரியர்களுக்குச் சம்பளம், பென்ஷன், வயதானவர்களுக்கு பென்ஷன், நாடகத்துறையில் இருப்பவர்களுக்கு எல்லாம் என்னென்ன சலுகை செய்ய வேண்டுமோ அவைகளையெல்லாம் செய்துகொண்டு வருகிறோம். இன்னும் செய்வோம். ஆனால் சினிமாவுக்கு வரிபோடுகிறோம் என்றால், சினிமாக்களை மூடிவிடுவோம் என்கிறீர்கள். ஒன்று கேட்கிறேன். திரு. அண்ணாத்துரை அவர்களும், மற்றவர்களும் ஒரு சினிமாக் கதை எழுத எவ்வளவு ரூபாய் வாங்குவது? கதை எழுத ஐந்து ரூபாய் கொடுத்தால் போதாதா? (சிரிப்பு) நகத்தில் அழுக்குப்படாமல் எழுதுவதற்கு அது போதாதா? சரி அது போகட்டும், 10 இரவு கஷ்டப்பட்டு எழுதினேன் என்றால் 100 ரூபாய் வாங்கிக் கொள்ளுங்கள், மேலும் வேண்டுமானால் 1,000 ரூபாய் வாங்கிக் கொள்ளுங்கள். அப்படி இல்லாமல் 50 ஆயிரம் ரூபாயா! 25 ஆயிரம் ரூபாயா! ஒரு கதைக்கு வாங்குவது?

இப்படி நீங்கள் 50 ஆயிரம் ரூபாய், 20 ஆயிரம் ரூபாய் என்று வாங்கிவிட்டால், அப்புறம் வேஷம் போடுகின்ற நடிகர்களைப் பார்த்து, நீங்கள் வில்லனை, கதாநாயகனை நடிக்க வேண்டுமென்று கேட்டால் ஒரு லட்சம் ரூபாய் தருகிறீர்களா என்று கேட்கிறார்கள். பத்மினியைப் போய்க் கேட்டால் ஆண்கள் வேஷம் போடுவது சுலபம் பெண்கள் வேஷம்போட்டு நடிப்பது என்றால் ரொம்பக் கஷ்டம், வெய்யிலில் நிற்கணும், பிரளணும், ஆடணும் பாடணும் ரொம்பக் கஷ்டம் இருக்கிறது. ஆகையால் 2 லட்சம் கொடுக்கவேண்டுமென்கிறார்கள். இப்படி அவர்கள் கேட்டால், டிக்கட்டு போடுகிறவர்கள் என்ன செய்வார்கள்?

திரு. ஆர். வெங்கடாசலம்: தலைவர் அவர்களே, கனம் அங்கத்தினர், இங்கு இல்லாத ஒருவர் பெயரைக் குறிப்பிட்டு பேசலாமா?

திரு. ஏ. சுப்ரமணியம்: சினிமா உலகத்தில் இருக்கிற பிரபல நடிகர்கள் கேட்கிறார்கள் வாங்குகிறார்கள். அதனால் சினிமாக் கொட்டகைக்காரர்கள் என்ன செய்கிறார்கள் என்றால், 2½ அணா போடப்பட்டிருக்கின்ற தரை டிக்கட்டை 4½ அணா போடுகிறார்கள், 4½ அணா போடுகின்ற பெஞ்சு டிக்கட்டை 6½ அணா போடுகின்றார்கள்.

இதை ஏன் சொல்லுகிறேன் என்றால், இப்போது பணம் போத வில்லை என்கிறார்கள். நமக்கு ரூ. 9 கோடி 51 லட்சம் துண்டு விழுகிறது. இதற்காக 7 கோடியே 15 லட்சம் ரூபாய்களுக்கு புது வரி போடுகிறார்கள். மக்கள் முன்னேற்றத்திற்கு வரி போடுவது தப்பா? கொள்ளை அடிக்க முடியுமா? ஏமாற்ற முடியுமா? வரி போட்டுத்தானே ஆகவேண்டும். சினிமாவுக்குப் போகிறவர்கள் ஏதாவது தவறுகிறார்களா? சினிமா பார்க்க கிராமத்திலிருந்து சைக்கிளில் 2, 3 பேர் ஏறிக் கொள்கிறார்கள். விலை உயர்ந்த சிகரெட் பிடிக்கிறார்கள். டிபன் உள்பட 4 கப் டீ குடிக்கிறார்கள். டிக்கட் வாங்கி சினிமா பார்க்கிறார்கள். இவ்வளவு பணம் அவர்கள் செலவு செய்தாலும் சினிமா பார்ப்பவர்களுக்குக் கஷ்டம் தோன்ற வில்லை. நாங்கள் ஒரு இரண்டணா டிக்கட்டின்மீது போட்டால், உடனே டிக்கட் மேலே ஓரணா போடப்போகிறார்கள் என்று சொல் கிறார்கள். அந்தந்த டிக்கட்டுக்குத் தகுந்த மாதிரி போடப் போகிறோம். பணக்காரர்களுக்கு உயர் வகுப்புக்கு டிக்கட் பணம் அதிகம் கொடுக்க சக்தி இருக்கிறது. ஹோட்டலில் ரூ. 2½ பில் போட்டால் 5 ரூபாய் நோட்டை அலட்சியமாக எடுத்துக் கொடுக் கிறார்கள். பண வீக்கம் அவ்வளவு அதிகரித்திருக்கிறது. வரி போட்டால் சினிமாவுக்கு வரி போட்டுவிட்டார்கள், வரி போட்டு விட்டார்கள் என்று கூறுகிறார்கள். அர்த்தமில்லாமல் எதிர்ப்பு கோஷம் புரிகின்றார்கள்.

4-20 p.m. இப்போது பிள்ளைகளுக்கு பள்ளிக்கூடச் சம்பளம் இல்லை. முன்பு மாதம் ஒன்றுக்கு 8 அணா, 1 ரூபாய், 2 ரூபாய் என்று சம்பளம் இருந்தது. ஐந்து பிள்ளை இருந்தால், மாதத்துக்கு 15 ரூபாய் கட்டவேண்டியிருக்கும். இப்போது அந்தமாதிரி இல்லையே. கஷ்டம் இல்லாது இப்போது எல்லோரும் ஜாதிமத பேதமின்றி படிக்க முன்வருகிறார்கள். இப்போது ஆரம்பப் பள்ளிகளில் மதிய உணவும், உடையும் கொடுக்கப்படுகிறது. இவைகளை எதிர்க்கட்சிகள் உணரவில்லையே. பஸ்காரர்களுக்கு வரி போடுவதினால் தவறுதல் இல்லை. போதுமான வருமானம் இருப்பதால் அவர்கள் அதைத் தாராளமாக செலுத்தலாம். இதனால் அவர்களுக்கு என்ன நஷ்டம்? என்ன கஷ்டம்? அதே போல் இப்போது விவசாயி ஒரு ரூபாய்க்கு 1 படி அரிசி கொடுக் கிறான் என்றால், அவன் அப்படிக் கொடுத்தால்தான் அவனுக்குக் கட்டுபடி ஆகும். அவன் வாங்கும் துணி 20 வருஷத்திற்கு முன்னால் கஜம் 8 அணா வாக இருந்தது. புடவை ரூ. 3-½-யாக இருந்தது. இப்போது என்ன விலை விற்கிறது? ஆகையினால் அவன் என்ன பண்ணுவான்? ஒரு படி போட்டால்தானே முடியும்? விவசாயி வாங்கும் மற்ற பொருள்களுக்கெல்லாம் விலை உயர்ந்திருக்கும்போது அவன் விற்கும் அரிசிக்கும் அதிக விலை இருந்தால்தானே கட்டுப்படியாகும்? மேலும் துணி நெய்கிற வனுக்கு என்ன கூலி கொடுப்பான்? நாலரை லணா, 6 அணா கொடுத்தால் போதுமா? ஏழைகள் வயிற்றில் ஈரத் துணியைப் போட்டுக் கொள்வதா? தொழிலாளர்களுக்குக் கூலி ரூ. 2½ என்றால், அதைத் துணிவிலை மீது ஏற்றுகிறார்கள். இதனால் துணி

5th July 1962] [திரு. ஏ. சுப்ரமணியம்]

விலை அதிகரிக்கின்றது. இதைக் குறைக்க முடியுமா? குறைந்தால் நெசவுத் தொழிலாளி என்ன செய்வான்? என்னென்ன எதற்காக வரி போட்டார்கள் என்பதை அறிய வேண்டும். காங்கிரஸ்காரர்கள் என்ன சும்மா வந்து சட்டசபையில் அமர்ந்து விட்டார்களா? இந்த தேசத்திற்காக விடுதலைக்காக உயிரையும் அர்ப்பணித்தார்களே. காந்தியார் சொன்னார் என்று படித்தார் நண்பர் திரு. கே ஆர் ராமசாமி அவர்கள். காந்தியார் இந்த மாதிரி எதிர்க்கும் கட்சியை ஒதுக்கித் தள்ளுங்கள் என்று சொன்னாரே. தேசத்தைக் காட்டிக் கொடுக்கும் தேசத் துரோகக் கட்சியைக் குழி தோண்டிப் புதையுங்கள் என்று பல தடவை கூறினாரே. அதன்படி நடந்தீர்களா? அதை ஏன் வாசித்துக் காட்டவில்லை? காந்தியார் சொன்னாரே என்றால், கால சந்தர்ப்பத்தை உத்தேசித்து எங்கோ, எதையோ சொல்லியிருக்கலாம். அதை மாற்றியும் கூறி இருக்கலாம். 1920-ம் வருஷத்திலிருந்து 1937-ம் வருஷம் காங்கிரஸ் ஆட்சி அதிகாரத்திற்கு வரும் வரை, இந்த தேசத்தில் எத்தனை துரோகச் செயல்கள் நடந்தன? மக்களுக்கு நல்ல திட்டம் உண்டா? கடவுள் புண்ணியத்தில் மேட்டூர் டாம் கட்டினார்கள். இப்போது அணை கட்டுவதற்கு தேடித் தேடிப் பார்த்தாலும் ஆறு எங்கும் இல்லை. இப்போது விவசாயிகளைக் கேட்டுப் பாருங்கள், காங்கிரஸ் என்ன செய்தார்கள் என்று. இதைவிட என்ன செய்ய முடியும்? இது காமதேனு. இப்போது கொண்டுவந்திருக்கும் இந்த பட்ஜெட்டானது காமதேனு. கேட்டதையெல்லாம் கொடுக்கக்கூடியது. அதுபோன்று இந்த வரவு செலவுத் திட்டமானது யாவருக்கும் நன்மையை செய்யக் கூடியதாகும்.

டெபுடி சேர்மன்: கனம் அங்கத்தினருக்குக் கொடுக்கப்பட்ட நேரம் முடிவடைந்து விட்டது.

திரு. ஏ. சுப்ரமணியம்: நான் இந்த மாகாண பிற்பட்ட இனத்தவர்கள் சங்கக் காரியதரிசி. எனவே பிற்பட்டவர்கள் விஷயமாக சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். தற்போது பிற்பட்டவர்களுக்கு ஸ்காலர்ஷிப் கொடுக்கிறார்கள். இந்த விஷயத்தில் ரூ. 1,200 என்றிருந்ததை இப்பொழுது 1,500 ரூபாயாக மாற்றியிருக்கின்றார்கள். இது ஒரு விஷயத்தில் வரவேற்கத் தக்கதாக இருந்தாலும் போதாது. இந்த வரம்பை ரூ. 2,000 பண்ணினால், கொஞ்சம் நன்றாக இருக்கும். நிலத்திற்கு மட்டும் வரிவிதிக்கும் முறையை பரிசீலிக்க வேண்டும். பள்ளிப் பிள்ளைகளுக்கு மதிய உணவும் உடையும் கொடுக்க சாஸ்வதமான நிலம் இருந்தால் நல்லது என்று நிதியமைச்சர் கூறியிருக்கின்றார். எதிர்க்கட்சிக்காரர்கள் இந்த நல்ல காரியத்துக்கு முன்வர வேண்டும். மேலும் பிற்பட்ட இனத்தவர்களுக்கு இன்னும் பத்து வருஷ காலத்திற்கு உத்தியோகம் வழங்குவதில் பர்செண்டேஜ் பார்த்துக் கொடுத்தால் சவுகரியமாக இருக்கும். நாம் இந்தியர் என்ற எண்ணம் எல்லோருக்கும் வரவேண்டும். கெட்ட எண்ணத்தை அடக்க வேண்டும். மணி அடித்துவிட்டது. இத்துடன் முடித்துக்கொள்கிறேன்.

[5th July 1962

* திரு. எம். ஜி. ராமச்சந்திரன்: அவைத் துணைத் தலைவரவர்களே, இந்த ஒரு நல்ல சந்தர்ப்பத்திலே நிதி நிலை அறிக்கை பற்றி நானும் பேச எனக்கு வாய்ப்பு கொடுத்ததைக் கண்டு உண்மையில் மகிழ்கிறேன். ஆட்சியிலே இருப்பவர்களைக் குறை சொல்கிறவர்களைக் கண்டு சில நண்பர்களுக்கு வெறுப்பும், ஆத்திரமும் ஏற்படுவதைக் கண்டு என்னைப் போன்றவர்கள், ஆச்சரியப்படுவதற்கில்லை.

குறிப்பாக, ஒரு வீடு கட்டும் மேஸ்திரி கட்டிக் கொடுத்த பிறகு வீட்டில் குடியேறுகிறவர்கள் கட்டின வீட்டுக்குக் குற்றம் சொல்வது இயற்கை. ஆனால் நாங்கள் வீட்டைப் பற்றிச் சிந்திக்கும் நேரத்திலேயே வீட்டில இருக்கும் கற்களைப் பற்றியும், அந்தக் கற்களை உருவாக்கிய தோழர்களைப் பற்றியும், அது ஏன உருவாக்கப்பட்டது என்ற கேள்வியைப் பற்றியும் சிந்தித்துப் பார்க்கிறோம். ஆகவே எங்களுடைய எண்ணத்தைக் குறையாக நீங்கள் கருதினால் அந்தச் சூழ்நிலை யாராலோ எப்போதோ ஏற்பட்டு விட்டது என்பதை மாத்திரம் நினைவில் கொள்வார்களானால், பிரச்னை சுமுகமாக, விவாதத்திற்குப் பயனுள்ளதாக அமையும், என்று கருதுகிறேன்.

நாங்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தின் அங்கத்தினர்களாக இங்கே அனுப்பப்பட்டிருக்கிறோம். திராவிட முன்னேற்றக் கழகத்தினுடைய அங்கத்தினர்களாக அனுப்பப்பட்டிருக்கும் நானோ எனது மதிப்புக்குரிய நண்பர் கே. ஆர். ஆர். போன்றவர்களோ எங்கள் கொளகையைப் பற்றிச் சொல்லும்போது, நாங்கள் எங்கோ கூட்டு சேர்ந்தோம் எப்படியோ கூட்டிலிருந்து வெளியே வந்தோம் அல்லது கூட்டில் அடைப்பட்டுக் கிடந்த நாங்கள் எப்படியோ சிறகடித்துப் பறந்து வெளியோ வந்தோம் என்ற கருத்தை தங்களுக்குள் வைத்துக்கொண்டு எங்களைத் தாக்குவதற்கு பயன்படுத்துவது கண்டு நாங்கள் அதிர்ச்சி அடையவில்லை. ஆனால் இங்கே பேசவேண்டியது நிதி நிலை அறிக்கை பற்றி என்று எண்ணியிருந்தேன். எனக்கு இது புதிய இடம். இரண்டாவது முறையாக இன்று பேசுகிறேன். வெளியே பேச வேண்டிய சர்ச்சைகளை எல்லாம் இங்கே கொண்டுவந்து வைத்திருக்கிறார்களே என்று வெட்கப்படுகிறேன். நமக்கு முன்னால் இருந்து வழிகாட்டிய பெரியவர்கள் இப்படித்தான் இருந்தார்களா என்று எண்ணிப்பார்க்கும்போது, அவர்களைப் பற்றிக் குறை கூறுவதற்கல்ல. இதற்குத்தானா நம்மை இங்கே அனுப்பினார்கள் என்று எண்ணி வெட்கப்படுகிறேன். வருந்துகிறேன். இங்கே பெரியவர்கள், அனுபவம் மிக்கவர்களைக் காண்கிறேன். இப்படிப்பட்ட இந்த மன்றத்தில் வீண் சர்ச்சைகளைக் கிளப்பி நேரத்தை வீணாக்குகிறோம் என்று எண்ணுகிறேன்.

ஏன் இந்த நிலையை நாம் பெற்றோம் என்று நானே எண்ணிப் பார்த்துக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. என்னைப் பொருத்தவரையில் ஒருவன் குற்றம் சாட்டப்பட்ட நிலையில் நின்றால் அவனுக்கு அவன் குற்றவாளி அல்ல என்று சொல்ல

5th July 1962] [திரு. எம். ஜி. ராமச்சந்திரன்]

வாய்ப்பு அளிக்கவேண்டும். நீதி மன்றத்திலிருந்து இங்கு வரை அது இருக்குமென்று கருதுகிறேன். நான் ஒரு கலைஞனை என்னுடைய தொழிலே அமைத்துக் கொண்டிருக்கிறேன். என்னுடைய கலைத் தொழிலைப்பற்றிக் குறை கூறினால், தவறாகச் செய்தி வெளியிடப்பட்டால், உண்மைக்குப் புறம்பானவை வெளிவந்தால், அவை உண்மை அல்ல என்று நான் மறுப்புக் கூறியாக வேண்டிய நிலையில் இருக்கிறேன். கூறியாகவேண்டும். நிதி நிலை அறிக்கையைப்பற்றிக் கூறுவதற்கு முன்வந்த நிலையில், குற்றம் சாட்டப்பட்டு அப்படிச் சாட்டுகின்ற நண்பர்களுக்கு அவர்கள் சாட்டிய குற்றச்சாட்டுகளுக்குப் பதில் கூறவேண்டிய நிர்ப்பந்த நிலையில் இருக்கிறேன் என்று சொல்லும்போது, தலைவர் அவர்கள் என்னைத் தவறாக எண்ணிவிடக்கூடாது என்று கேட்டுக் கொள்கிறேன். என்னுடைய சம்பளம் மாதம் ரூ 2,200. நான் ஒரு கம்பெனியில் ஒப்பந்தம் செய்துகொண்டிருப்பவன். சிவாஜி கணேசன் அவர்களும் ஓரளவுக்குச் சம்பளம் வாங்குகிறவர். ஒரு பிரைவேட் லிமிடெட் கம்பெனியில் அங்கத்தினர். அவர்கள் சொல்கிற படத்தில் நடிக்கப் பொறுப்பேற்றுக் கொண்டிருக்கிறவர்கள். நானும் அப்படித்தான். அதைப் புரிந்துகொள்ளாமல் சில அங்கத்தினர்கள் ஏதோ நினைத்துக்கொண்டு எங்களைத் தாக்குவதுபோல எண்ணிக்கொண்டு அவர்கள் நிலையை வெளிப்படுத்திக் கொண்டார்கள். அமெரிக்காவுக்கு நாங்கள் எல்லாம் போகவேண்டுமென்று அவர்கள் சொல்லும்போது, அந்தப் பெருந்தன்மையைக் கண்டு நாங்கள் பெருமைப்படுகிறோம். நாட்டில் இருக்கிற கலைஞர்கள், நுணுக்க அறிஞர்கள், திறமையாளர்கள் கண்டிப்பாக வெளிநாடுகளுக்குச் செல்லத்தான் வேண்டும். விஷயங்களைத் தெரிந்துவர வேண்டும். அதை மக்களுக்கு எடுத்துச்சொல்ல வேண்டும். ஆட்சியாளர்கள் இந்த முறையில் நல்ல உதவி செய்யவேண்டும். இப்போதும் செய்துவருகிறார்கள். அதைப் பாராட்டுகிறேன். அதற்காகப் பெருமைப்படுகிறேன். அதே சமயத்தில் கலைஞர்கள் எந்த அளவில் தங்கள் உடலை, உயிரைப் பணயம் வைத்து கலைக்காக தங்கள் வாழ்க்கையை அர்ப்பணிக்கிறார்கள் என்று புரிந்து கொள்ளாமல், அதைப்பற்றி விரிவாகத் தெரிந்து கொள்ளாமல், அட்டைக் கத்தி வைத்துக்கொண்டு சண்டை போடுகிறார்கள் என்று கேவலமாக, கேலியாகப் பேசுவது, என்னைப் பொருத்த வரையில், நான் அப்படி நினைக்காவிட்டாலும், அவர் கருத்தில் தொனித்த விஷயம் உண்மையில் சரியல்ல என்றுதான் நான் கூறமுடியும். இந்த அவையில் பேசப்படுகிற பேச்செல்லாம் குறிப்பெடுக்கப்படுகிறது. அது புத்தகமாக வெளிவரப்போகிறது. இதை வெளிநாடுகளிலிருந்து வருகிறவர்கள் பார்ப்பார்கள். அவர்கள் இதைப்பற்றி என்ன நினைத்துக்கொள்வார்கள்? என்னைப் பற்றிப் பேசினால், பரவாயில்லை. இங்கே பேசுகிறவர்கள் தமிழகக் கலைஞர்களைப் பற்றி, கலைத் தொழிலைப் பற்றி இழித்துப் பேசப்படுவதைக் கண்டால் எப்படியிருக்கும்? இந்த மன்றத்தின் மதிப்பு எந்த அளவுக்கு அங்கு மதிக்கப்படும்? உண்மைக்குப் புறம்பான செய்தியைப் பேசுவது அழகல்ல. என்னுடைய

4-30 p.m.

கையில் எத்தனை ஆபரேஷன்கள், ரஞ்சன் போன்றவர்களுக்கு எவ்வளவு காயங்கள் பட்டிருக்கின்றன என்பது வைத்திய நண்பர்களுக்குத் தெரியும். இங்கு பேசிய நண்பர்களும் பார்த்திருக்கவேண்டும். தனிப்பட்டவர்களைத் தாக்கியும் இழித்தும் கூறுவதில் கிடைக்கும் பலன் ஒன்றும் இல்லை. வேறு எதையும் எதிர்பார்த்துப் பேசக்கூடாது. நாட்டு மக்களுக்கு இந்த ஆட்சியில் இருக்கிறவர்கள் என்ன செய்யவேண்டுமென்று சொல்வதற்கும், ஆட்சியாளர்கள் என்ன செய்திருக்கிறார்கள், என்ன செய்யப் போகிறார்கள் என்று பேசுவதற்கும்தான் இங்கு இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

அதோடு இங்கே திராவிட நாட்டைப் பற்றிப் பேசுகிறார்கள், திராவிட நாடு எங்கேயிருக்கிறதென்று. கேரளம் பிரிந்துவிட்டது, ஆந்திரம் பிரிந்துவிட்டது, கன்னடம் பிரிந்துவிட்டது, தமிழகம் தனியாக இருக்கிறது; இந்த நேரத்திலே எப்படி அவர்கள் திராவிட நாடு கேட்கலாம் என்று கேட்கிறார்கள், ஒருமைப்பாட்டைப்பற்றிப் பேசுகிற நண்பர்கள், இந்தியா ஒரு நாடு என்று சொல்ல எப்படி அவர்களுக்கு உரிமை இருக்கிறதோ, அதே போன்றுதான் திராவிட நாடு தனிநாடு என்று சொல்வதற்கு எங்களுக்கும் உரிமை இருக்கிறது என்று நம்புகிறோம். திராவிடநாடு என்று சொல்வது அவசியம் இல்லையென்னும் நண்பர்களுக்குச் சொல்லுகிறேன். பிரிந்துபோன நாட்டை ஒன்று சேர்த்து ஆட்சி அமைத்து ஒருவருக்கொருவர் பகிர்ந்துகொள்ளும் வாய்ப்பு இருக்கிறது என்ற நம்பிக்கையுடன்தான் சொல்கிறோம் என்பதை அங்கத்தினர்கள் புரிந்துகொள்ளவேண்டும். ஆயுதத்தைப் பயன்படுத்தும்போது, அந்த ஆயுதத்தை இன்னொருவர் கையில் கொடுத்துவிடக்கூடாது. இந்தியா பாரதநாடு, அது ஒன்றுதான் என்று சொல்கிற நண்பர்கள், கேரளம், ஒரிஸ்ஸா, வங்காளம் போன்றவை இப்போது பிரிந்து தனித்தனி நாடாக இருக்கிறது என்று சொல்கிற நண்பர்கள், அந்தத் தனியாகப் பிரிந்திருக்கும் நாடுகளை வைத்துக்கொண்டு அவற்றிற்கு மத்திய அரசாங்கம் என்று ஒன்றை வைத்திருக்கும்போது, அதற்கு மத்திய ஆலோசனைக் குழு இருக்கிறபோது, திராவிட நாட்டிற்கும் அப்படி ஒன்று ஏற்படாது என்று நமக்கு நாமே ஏன் கற்பனை செய்துகொள்ள வேண்டும்? முடியாது என்று ஏன் சொல்லவேண்டும்? முடியுமா முடியாதா என்ற கேள்வியில் சுதந்திர உணர்ச்சி தோன்றுவதில்லை. சுதந்திரம் வேண்டுமென்று ஒரு மனிதன் கூறுகிறான் என்றால், கூறுகிறவன் கிடைக்குமா, கிடைக்காதா என்று யோசித்துக்கொண்டிருப்பதில்லை. இது பிறப்புரிமை. சரித்திரம் சொல்ல வேண்டிய முடிவு அது. வரலாறு சொல்லவேண்டிய முடிவு. தனி நபர் எழுப்புகின்ற முடியுமா முடியாதா என்ற கேள்வியில் அதைச் சொல்லமுடியாது. ஆகையால் நண்பர்களுக்குச் சொல்கிறேன் முடியுமா முடியாதா என்ற கேள்வி உங்களுடன் இருக்கட்டும். எப்படி முடியும் என்பது மக்களுக்குத் தெரியும். மக்கள் அதற்கு வழி சொல்வார்கள். அப்போது அது முடியும்.

5th July 1962] [திரு. எம். ஜி. ராமச்சந்திரன்]

இந்த பட்ஜெட்டைத் தயார் செய்த நிதி அமைச்சர் அவர்களின் திறமையை, துணிவை நான் பாராட்டுகிறேன். விலைவாசிகளைக் குறைக்கவேண்டும் அரிசி விலையைக் குறைக்க வேண்டுமென எல்லோரும் சொல்லிக்கொண்டிருக்கிற நேரத்தில், விலைவாசி இன்னும் அதிகமாகக்கூடிய விதத்தில், அரிசி, உணவுப் பண்டங்களின் விலை உயருகின்ற நிலையில் சில திட்டங்களை வைத்துக்கொண்டு நிதி நிலையை அறிக்கையை வெளியிட்டிருப்பது கண்டு நான் உண்மையிலேயே அதிர்ச்சியடைகிறேன். அமைச்சர் அவர்களிடத்தில் எனக்கு அதிக மதிப்பு உண்டு. மரியாதையும் உண்டு. பெரியவர், எந்தவகையில் பார்த்தாலும் மதிப்புள்ளவர்கள். நண்பர் கே. ஆர். ராமசாமி அவர்கள் சொல்லியதுபோல, அவர்களைப்பற்றி நான் பெருமைப்படுகிறேன். நிதிநிலை அறிக்கையைப்பற்றி புள்ளிவிவரங்களோடு பேச காலம் இல்லை. இருந்தாலும் என் அபிப்பிராயங்களைப் பொதுவாகச் சொல்வதில் தவறில்லை என்று நினைக்கிறேன். நண்பர் சுப்ரமணியம் அவர்கள் கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டியிருந்ததில், நேரம் சென்றுவிட்டது. நிதிநிலை அறிக்கையைப் பார்த்ததில் ஏன் அதிர்ச்சி அடைந்தேன் என்ற கேள்விக்குப் பதில் சொல்ல விரும்புகிறேன். உணவு விலையைக் குறைக்கவேண்டுமென்றால், அது பலவழிகளில் குறைக்கப்படவேண்டும். விவசாய உற்பத்திக்குத் தேவையான கருவிகள், விதைகள், உரம், இவை போன்றவைகளைச் சரியான வகையில் கொடுக்க முடியவில்லை. அதே சமயத்தில் விவசாயிகளுடைய தேவை அதிகப்படுகிறது. அதனால் உற்பத்தி செய்யப்படுகிற பொருள்கள் விலை ஏறலாம். அதே சமயத்தில் இருக்கும் நிலையைச் சரிபார்த்து, அவற்றைக் குறைக்க வேண்டுமென்று வேண்டுகோள் விட்டுக்கொண்டிருக்கிற நிலையில், உணவுப் பண்டங்களைக் கொண்டுவருகிற பெரிய லாரி போன்றவைகளுக்கு வரிவிதிப்பது அந்தப் பண்டங்களின் விலையை உயர்வாக்கும் என்று கருதுகிறேன். லாரிகளுக்குப் போடக்கூடிய வரியின் மூலம் எந்தக் காரணத்தைக் கொண்டும் உணவுப்பண்டங்களின் விலை, நெற்று, வைக்கோல், அரிசி, பழங்கள், கீரைகள், காய்கறிகள் போன்ற பண்டங்களுக்கு எந்தக் காரணத்தினாலும்; எந்த நிலையிலும் விலை உயர்வு ஏற்படாது என்று ஆட்சியாளர்கள், குறிப்பாக நிதி அமைச்சர் அவர்கள், உத்திரவாதம் கொடுத்தால் நிச்சயமாகப் போற்றுகிறோம். அதைப்போன்றுதான் பஸ்களுக்குப் போட்டிருக்கிற வரி. பஸ்களைத் தேசியமயமாக்கவேண்டுமென்று கூறுகிற நாங்கள் பஸ்களுக்குப் போடுகிற வரிகளை எதிர்க்கிறோம் என்று பலர் சொல்கிறார்கள். நாங்கள் பஸ் முதலாளிகளுக்கு நண்பர்கள் போலவும், அவர்கள் எலக்ஷனுக்குப் பணம் கொடுப்பார்கள் என்று எதிர்பார்த்து நாங்கள் இருப்பதுபோலவும் சிலர் கேலியாகப் பேச முற்படுகிறார்கள். ஆனால் ஒன்று கூற விரும்புகிறேன். பஸ் தொழிலைத் தேசியமயமாக்க ஆட்சியாளர்கள் முன் வந்தால், எங்களுக்கு ஆட்சேபணை இல்லை. விலைவாசி உயராது என்று உத்திரவாதம் கொடுத்தால், எங்களுக்கு அதிலும் ஆட்சேபணையில்லை. உணவுப் பண்டங்களை, தானியங்களை விலை

அதிகமாக்குகின்ற வரிகளைப் போடாதீர்கள். வரிபோடாமல் ஆட்சி நடத்துங்கள் என்று சொல்லவில்லை. வரி போட்டுத் தான் சர்க்காரை நடத்த முடியும். அதில் எங்களுக்கு மாற்றுக் கருத்து இல்லை. போடுகிற வரி ஏழை மக்களைப் பாதிக்கக் கூடாது. சினிமாவில் லட்சக் கணக்காகப் பணம் சம்பாதிக்கிறார்கள் என்கிறார்கள். ஒரு கதாசிரியருக்கு ரூ. 5,000, 50,000 கொடுப்பதா என்று கேள்வி கேட்கக்கூடிய நிலைமை இங்கு இருக்கிறது, என்றால் உண்மையிலேயே நான் அதைக்கண்டு பரிதாபப்படுகிறேன். உழைப்புக்கு, பொருளுக்கு விலை கூறுவது இயற்கை. அறிவுக்கு விலை கூறவேண்டுமென்று கூறுகிறவர்களைப் பற்றி என்ன நினைப்பது? அறிவுக்கு விலை கூறமுடியுமா? யாருடைய கருத்து எவ்வளவு உயர்ந்தது என்பதை யார் நிர்ணயிப்பது? அறிவுக்கு இன்னொரு அறிவுதான் விலை. இன்று சொல்லப்படுகிற கருத்து பிடிக்காமல் இருக்கலாம். நூறு ஆண்டுகளுக்குப் பிறகு அதைப் பார்த்தால், அந்தக் கருத்து பல தலைமுறைகளுக்கு வழிகாட்டியாக அமையக்கூடும். அறிவுக்கு நிச்சயமாகத் தகுதி நிர்ணயம் நிர்ணயித்துவிடக்கூடாது. எந்தக் கண்ணோட்டத்துடன் பார்த்தாலும், சினிமாத் தொழிலில் இருப்பவர்கள் லட்சக்கணக்காக சம்பாதிக்கிறார்கள் என்று தெரிந்துவிட்டால், கண்டிப்பாக அதைக் கண்டுபிடித்து நடவடிக்கை எடுக்க வேண்டும். தென்னிந்திய நடிகர் சங்கத்தின் தலைவன் என்ற முறையில் நான் சொல்கிறேன். யார் பிளாக்கில் பணம் வைத்திருந்தாலும் சரி, எந்த வகையில் சேர்த்திருந்தாலும், செலவழிப்பதாக இருந்தாலும் சரி, அதைக் கண்டுபிடித்து நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று இங்கு பகிரங்கமாகவே ஒரு அறைகூவலை விடுகின்றேன். மக்களை ஏமாற்றித் தங்கள் கையில் பணம் வைத்திருந்தால், அவர்கள் நிச்சயமாகத் தண்டிக்கப்படவேண்டியவர்கள் தான். சினிமாவில் அதிகப் பணம் வாங்குகிறார்கள் என்று சொல்கின்றார்களே, அது சர்க்காருக்கு உண்மை என்று தெரிந்திருந்தால், ஏன் நடவடிக்கை எடுக்கக் கூடாது? அனுதாபம் என்று சொல்வார்களானால் அது தேவையில்லை என்று சொல்வேன்.

ஏனென்றால் அது இங்கே தேவையில்லை. ஒழுங்கு, நேர்மை, நாணயம் என்று வந்துவிட்டால், அங்கே நட்புக்கு இடமில்லை. நட்பு வேறு, நாணயம் வேறு. நாணயத்தை செம்மைப்படுத்துவதற்கு நட்பு பயன்படவேண்டும். நாணயத்தைக் கெடுக்க நட்பு இருக்கக்கூடாது.

நீலகிரியில் சினிமாத் தொழிலுக்காக பிலிம் தொழிற்சாலை கட்டப்பட்டிருக்கிறது, அதற்கு 10 லட்ச ரூபாய்க்கு மேல் செலவு செய்யப்பட்டிருக்கிறது; இயந்திரங்கள் வந்து சேர்ந்துவிட்டன என்று நிதி நிலை அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருப்பதைக் கண்டு மகிழ்கிறேன். ஆனால் அந்தத் தொழிற்சாலை வேலைகள் நிறைவேறி, தொழிற்சாலை இயங்க இன்னும் 3, 4 ஆண்டுகள் ஆகுமென்று கருதுகிறேன். வேலைகள் விரைவாக நடைபெற்றால், இன்னும் இரண்டு ஆண்டுகளில்கூட தொழிற்சாலை இயங்க ஆரம்பிக்கலாம்.

5th July 1962] [திரு. எம். ஜி. ராமச்சந்திரன்]

ஆனால் நாம் நினைத்தபடிதான் நடப்பது இல்லையே. அதுவரையில் சினிமாத் தொழில் என்ன ஆவது? ஏதோ சினிமாத் தொழிலுக்கு வரி விதித்து விட்டால், சினிமாக்காரர்கள் கத்துகிறார்கள் என்று சொல்லுகிறார்கள். அதற்கும் எங்கள் பேரில் வந்துதான் மோது கிறார்கள். நடிகர்கள் ஏராளமாகப் பணம் வாங்குகிறார்கள், அதனால்தான் வரி போடுகிறார்கள், சினிமாவால்தான் மக்கள் கெட்டுப் போகிறார்கள் என்று கூறுகிறார்கள். மக்கள் கெடுகிற காரியத்தை சர்க்கார் அனுமதிக்கக்கூடாது. மக்களை வாழ வைக்கத்தான் சர்க்கார். மக்களுக்குப் பாதுகாப்பு, நன்மை செய்யத்தான் சர்க்கார். எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும், மக்களுக்குத் தீமை பயக்கக்கூடிய காரியத்தை யார் செய்தாலும், எந்த ஸ்தாபனம், எந்த அமைப்பு, எந்தத் தொழில் செய்தாலும், அதை மக்கள் மத்தியில் நடமாடவிடக்கூடாது. சினிமாத் தொழில் உண்மையில் கேடு பயக்கக்கூடியதானால், அதைத் தடை செய்துவிட வேண்டும். சினிமாத் தொழில் இருப்பதால், மக்களுக்கு நன்மையும் பயக்கும், தீமையும் பயக்கும் என்றால், தீமையைத் தடுத்துவிட்டு, நன்மையை அதிகப்படுத்த முடியும் என்ற நம்பிக்கை இருக்குமானால், நிச்சயமாக அதற்கு வேண்டிய சட்ட திட்டங்களைப் போடவேண்டும். நான் ஒன்று கேட்கிறேன். வாதத்திற்காகச் சொல்லுகிறேன். ராமச்சந்திரன் 3 லட்ச ரூபாய் வாங்குகிறான் என்று வைத்துக்கொள்ளுங்கள். அதில் எவ்வளவு லட்சம் வேண்டுமானாலும், சர்க்கார் எடுத்துக் கொள்ளட்டும். ஆனால் நடிகர்களுக்கு எதிர்காலத்தைப்பற்றி உத்திரவாதம் தர முடியுமா? வாழ்க்கைப்பணம் தரமுடியுமா? இந்தக் கேள்வியை நாங்கள் கேட்போம். எங்களுக்குப் பணம் தேவையில்லை. சர்க்கார் முழுவதையும் எடுத்துக் கொள்ளட்டும், ஒரு சிறு வீடு, எங்களுக்கு வாழ்க்கை வசதிகள், தேவையான வசதிகள் போதும், பெரிய அளவில் வேண்டாம், சாதாரண வாழ்க்கை நடத்திக் கொள்ளுகிறோம். எங்களுக்கு வயதான பிறகு வாழ்க்கைப்பணம் தரமுடியுமா, அதற்கு வழி செய்து கொடுக்க முடியுமா என்று கேட்போம். அதற்கு, அந்த அதிகாரம் எங்களிடம் இல்லை. டில்லியிடமிருக்கிறது என்று சொன்னார்கள். பிலிம் இறக்குமதி இல்லை என்று சொல்லிவிட்டபடியால், அடுத்த மூன்று மாதங்களில் பல **Studi** களில் வேலை இல்லை என்ற நிலை ஏற்பட்டிருக்கிறது. இன்று காலையில் கேள்விபட்டேன் 300 ஆட்களுக்கு **Studio-** வில் வேலையில்லை என்று சொல்லி விட்டார்கள் என்று. இரண்டு மூன்று நாட்களுக்கு முன் ஒரு ஸ்டுடியோவில் 40 ஆட்களுக்கு வேலையில்லை என்றார்கள். இன்னும் தொடர்ந்து சொல்லப்போகிறார்கள். 100 ரூபாய், 80 ரூபாய் மாதம் சம்பளம் வாங்கக்கூடிய குறைந்த சம்பளக்காரர்கள் அவர்கள். அவர்களுக்கெல்லாம் வேலையில்லை என்று **Notice** போட்டாகிவிட்டது. வேலையிழந்து நிற்கும் அவர்களின் குடும்ப நிலைமையை எண்ணிப்பாருங்கள். அந்த நிலையில் இருப்பவர்களை யார் காப்பாற்றுவது? நீ 8 முழம் வேஷ்டி கட்ட. வேண்டாம், பாதியைக் கிழித்துக்கொடுத்துவிட்டு, துண்டு கட்டிக்கொள் என்று

4-40 p.m.

சொல்லுங்கள் அது போதும். மக்களில் பலர் துண்டு கூட கட்டிக் கொள்ள இயலாத நிலையில் இருக்கிறார்கள், ஆகையால் நீ 8 முழத்திலிருந்து 4 முழத்தைக் கிழித்துக்கொடு என்றால் நியாயம். மற்றவர்கள் நிர்வாணமாக இருக்கும்போது, நாங்கள் கோட், சூட் போடுவது நியாயமல்ல. பகிர்ந்து கொள்ளுகிறோம். துண்டுகூட இல்லாத நிலையில், நீ இருப்பதை அவிழ்த்துக்கொடுத்துவிடு என்றால், எப்படி முடியும்? பிலிம் இறக்குமதி இல்லை. ஷூட்டிங், படப்பிடிப்பு நின்றுவிட்டது. Studio- -ல் வேலையில்லை. வேலையில்லாத காரணத்தால், பட முதலாளிகள் வேலையாட்களுக்குப் பணம் கொடுக்க முடியவில்லை. இதற்கு வழி செய்ய முடியுமா என்றால், டில்லி சர்க்கார் கையில் இருக்கிறது ஏற்றுமதி, இறக்குமதி அதிகாரம், நாங்கள் ஒன்றும் செய்யமுடியாததற்கு வருந்துகிறோம் என்கிறார்கள் நம்முடைய மாநில சர்க்கார். இந்த நாட்டிலே ஏற்படுகிற போராட்டம், புரட்சி, குழப்பம், ஏழ்மை, வறுமை, இதற்குப் பதில் சொல்ல வேண்டியது தமிழக சர்க்கார். இவற்றைப் போக்க, செய்யவேண்டிய காரியத்தைச் செய்கிற அதிகாரம், டில்லி சர்க்காரிடம் இருக்கிறது. அந்த அதிகாரத்தை நீங்கள் கேட்க வேண்டும், அல்லது வற்புறுத்திப்பெற வேண்டும், அல்லது கெஞ்ச வேண்டும். நம்முடைய தலைவர்கள் போய் கெஞ்ச வேண்டாம். நான் அதை ஆதரிக்கவில்லை. வற்புறுத்திப்பெற வேண்டும். புதிய தொழிற்சாலை இயங்கி பிலிம் கிடைக்கிற வரையில், இறக்குமதி மூலம் பிலிம் கிடைக்கும் என்ற உத்திரவாதம் வேண்டும். Kodak--ல் இருக்கிற பிலிம் கிடைக்க வேண்டுமென்றால், அது Sterling area. அன்னியச் செலாவணி தட்டுப்பாடு காரணத்தால், அது கிடைக்காது. நாங்கள் அதைக் குறைகூறவில்லை. Rupee-area விலிருந்து, Agfa film வந்திருக்க வேண்டும். அதற்கு ஏற்பாடு செய்திருக்க வேண்டும். இறக்குமதி இல்லாத காரணத்தால், ஆயிரக்கணக்கான சினிமாத் தொழிலாளர்கள் வேலையை இழக்க நேரிடும் என்ற அச்சம் ஏற்பட்டிருக்கிறது. அந்தத் தொழிலாளர்கள் 7-ம் தேதி அமைச்சர்களைக் காண இருக்கிறார்கள். அவர்கள் நிலையை தயவுசெய்து அமைச்சர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். நவம்பர் மாதம் Agfa film கிடைக்கும் என்கிறார்கள். ஆகவே அது வரையில் 3, 4 மாதம் வேலையில்லாமல் போகிற நிலைமை ஸ்டுடியோவில் ஏற்படலாம். அந்த நிலையில், தொழிலாளர்களுக்கு வேலை போகாமல் இருக்க, அமைச்சர்கள் உத்திரவாதம் கொடுக்க வேண்டும். அதற்கு வேண்டிய காரியத்தைச்செய்து, பட்டினி ஏற்படாத நிலையை உருவாக்கிக் கொடுக்க வேண்டும். இதை வேதனையோடு, அதே நேரத்தில் உரிமையோடு, நட்பு முறையோடு, நாணயத்தோடு கேட்கிறேன். நட்பு முறைக்கும் நாணயத்துக்கும் சம்பந்தமில்லை என்று நான் முன்னர் சொன்ன கருத்தில் இதைச் சொல்லவில்லை. நாணயத்தோடும் நட்போடும் கேட்கிறேன். அமைச்சர்கள் இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு, ஏழைகளுக்கு வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்படுகிற நிலைமையை ஒழித்தாக வேண்டும்.

5th July 1962] *[திரு. எம். ஜி. ராமச்சந்திரன்]*

இன்னென்று கூறுவேன். இந்த நிதி நிலே அறிக்கையின் மீது பேசும்போது நமது நண்பர் சுப்ரமணியமும் இன்னும் பலரும் ஒருமைப் பாட்டைப்பற்றியும், அதே சமயத்தில் பெரும்பான்மை யாக ஆளுங்கட்சிக்காரர்கள் வந்திருப்பதையும் சுட்டிக் காட்டி ஞர்கள். நான் ஒன்று சொல்லுவேன். பெரும்பான்மையாக வருகிறது சரிதான்; வந்ததும் சரிதான்; பெரும்பான்மையாக இருப்பவர்கள் ஆட்சியில் இருப்பதும் சரிதான். ஆனால் எப்படிப் பெரும்பான்மையானவர்கள், மக்களுடைய ஓட்டுக்களைப் பெற்று, அந்த இடத்திற்கு அவர்கள் தகுதி படைத்தவர்கள், நல்லவர்கள் என்ற நம்பிக்கையோடு தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிருர்களோ, அதைப் போலத்தான், ஒவ்வொரு தொகுதியிலிருந்தும் வந்த நண்பர்கள் அந்தந்தத் தொகுதி மக்களுடைய நம்பிக்கையைப் பெற்று வந்திருக்கிருர்கள். ஆகவே நிச்சயமாக, அவர்கள் தகுதி இல்லாதவர்கள் என்று பொருள் அல்ல. எங்களுக்குப் பெரும் பான்மை பலம் இருக்கிறது என்ற ஒரே தகுதிதான் நீதிக்கு அடையாளம் என்ருல், அது நீதியல்ல. மற்றவர்களுடன் எண்ணத்தைப் பரிமாறிக் கொண்டு, சொல்லுகிறவர்கள் எதற்காகச் சொல்லுகிருர்கள் என்பதைப்புரிந்து, அது இந்த நாட்டிற்கு ஏற்றதாக இருந்தால், அதை மேற்கொண்டு செயல்பட வேண்டுமென்ற எண்ணம் பெரும்பான்மையாக உள்ளவர்களுக்கு வேண்டும். குழந்தைகள் தவறு செய்தால், வலிவு பெற்ற பெரியவர்கள் எப்படிச் சரி செய்து கொண்டு போகிருர்களோ, அதைப்போல இங்கே பெரும்பான்மை பலம் பெற்றவர்கள் இருக்க வேண்டும். எங்களுக்குத்தான் பெரும்பான்மை பலம் இருக்கிறது, ஆகவே எங்களுக்குத்தான் உரிமை இருக்கிறது, நாங்கள் தான் எதையும் செய்வோம், மற்றவர்கள் குறைகூறக்கூடாது என்ற நிலேமை நாட்டில் தோன்றக்கூடாது. தோன்றினுல் அது ஜனநாயகமல்ல. நண்பர்கள் சொன்னூர்கள் லண்டனிலிருந்து தொழிற்கட்சித் தலேவர்கள் வந்திருந்தார்கள். அவர்களிடம், கன்சர்வேடிவ் கட்சியார் ஏன் வந்தார்கள் என்று கேட்டோம், நாங்கள் செய்வதையேதான் அவர்களும் செய்கிருர்கள், ஆகவே அவர்கள் வந்து விட்டார்கள் என்று சொன்னுர்கள். நான் உங்களுக்குச் சொல்வேன். அட்லி பிரதம மந்திரியாக இருந்த போது, இந்தியாவுக்கு விடுதலே கிடைத்தது. அவருக்குப் பிறகு அவர் நிறைவேற்றிய பல திட்டங்கள் கன்சர்வேடிவ் கட்சிக் காரார் பிரதம மந்திரியாக வந்தபோது, நீக்கப்பட்டன. நண்பர் சுப்ரமணியம் இதை எப்படி ஒரே கொள்கை என்று சொல்ல முடியும்? இப்படிப்பட்ட கருத்து மாறுபாடு இருக்கத்தான் செய்யும். அங்கேயிருக்கிற மதிப்பு எல்லாம், ஒரு யுத்தம் நடந்தது என்ருல், பிரதம மந்திரி ஒரு திட்டத்தை ரகசியமாக வைத்துக் கொண்டிருக்கிருர் என்ருல், எதிர்க்கட்சித் தலேவரை அழைத்து அதன் நகல் ஒன்றைக் கொடுப்பது வழக்கம். அப்படி எண்ணத்தைப் பரிமாறிக் கொள்ளுகிற பழக்கம் அங்கே யிருக்கிறது. அதை நாம் மனதில் கொள்ள வேண்டும். மக்களிடம் ஓட்டு வாங்குவது என்ற சூழ்நிலே வேறு. இங்கே வந்தபிறகு

[திரு. எம். ஜி. ராமச்சந்திரன்] [5th July 1962

உள்ள அமைப்பு முறை வேறு. இது ஒரு கோவிலாகக் கருத வேண்டும். இங்கே வந்து பேசுகிறவர்கள் மாச்சரியமின்றி தங்கள் உண்மையான கருத்துக்களை நேரடியாகச் சொல்லி, அதிலிருந்து நன்மை பயக்கக்கூடிய காரியங்களைச் சத்தாக எடுத்து மக்களுக்குக் கொடுக்கக்கூடிய பொறுப்புள்ளவர்களாக நடந்து கொள்ள வேண்டும். அந்த எண்ணத்தில் சொல்லுகிறேன். எங்களுடைய தனிப்பட்ட கொள்கைகளைச் சொல்ல நம்முடைய கொள்கைகளைச் சொல்ல வெளியில் மேடை இருக்கிறது; அங்கே சொல்லுவோம், கேட்கவேண்டியது —மக்கள். இங்கே பேச வேண்டியது நேர்மை, நாணயம், எண்ணத்தைப் பகிர்ந்து கொள்ளுகிற தன்மையில் பேசுவோம். என்னுடைய பேச்சில் குறை இருந்தால் மன்னிக்க வேண்டும். மற்றவர்கள் யாராவது குறைபாடுள்ளதாகப் பேசியிருந்தால், அவர்களையும் மன்னித்து விடுங்கள் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இந்த நிதி நிலை அறிக்கையைப்பற்றிச் சொல்லும்போது, நான் குறிப்பிட விரும்புவதெல்லாம் நீங்கள் ஆட்சிக்கு வந்தது பெரிதல்ல, ஆட்சிக்கு வந்து ஐந்து ஆண்டுகள் இருக்கப்போவது பெரிதல்ல. இதற்கிடையில் வேண்டுமானாலும், நீங்கள் மக்கள் வரிச்சுமையைத் தாங்கிக் கொண்டே போகிறார்கள் என்று வரியைப் போட்டுக்கொண்டே இருக்கலாம். மக்களில் சிலர் அதனால் ஏற்படும் கஷ்டங்களை எடுத்துச் சொல்லலாம். சிலர் எடுத்துச் சொல்லாமலும் இருக்கலாம். என்னைச் சிலர் கேட்டார்கள் "நீங்கள் ஏன் அரசியல் கட்சியில் இருக்கிறீர்கள்? நீங்கள் கலைஞனாகவே இருந்து கருத்துக்களைச் சொன்னால், கேட்க மாட்டார்களா" என்று சொன்னார்கள். இன்றைக்கு சினிமாவுக்கு வரி போட்ட பிறகும், வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்பட்ட பிறகும், அவர்கள் சொன்ன கருத்தை நான் இங்கே சொல்லுவது தவறல்ல என்று கருதுகிறேன். அவர்கள் சொன்னார்கள் 'அடுத்த தலைமுறை வாழ்வதற்காக இந்தத் தலைமுறையினர் செத்து விடுவதா?' அடுத்த கேள்வி—'வரி கொடுத்துச் சாவதை விட வரி கொடுக்காமலே சாவது மேலல்லவா?' என்று கேட்கிறார்கள். இதைப் போன்ற எண்ணம் பலரிடம் தோன்றலாம். அந்தச் சூழ்நிலை நாட்டில் தோன்றக்கூடாது. மக்கள், அடிக்க அடிக்க குனிந்தால், எதையும் செய்யலாம் என்ற எண்ணம் ஆட்சியாளருக்கு வரக்கூடாது என்று மிகப் பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

வரி அதிகமாகிவிட்டதால், 600 பேர் ரயிலில் டிக்கட் இல்லாமல் பிரயாணம் செய்ய முயற்சித்தார்கள் என்று பத்திரிகையில் படித்தேன். அறுநூறு, ஆறாயிரம், ஆறு லட்சம் ஆனால் இந்த நாட்டின் நிலை என்ன? வரிகொடா இயக்கம், ஒத்துழையாமை இயக்கம் போன்ற பயங்கர நிலை ஏற்பட்டால் என்னவது? இது அரசியல் கட்சிகளால் உண்டாக்கப்படுவதாக நான் சொல்லவில்லை. ஆகவே, சோர்ந்து போன உள்ளங்களைத் தட்டி எழுப்பும் அமைச்சர்களாக இருந்து; நாட்டுக்குப் பலன் தரத்தக்க காரியங்களைச் செய்ய வேண்டும்.

5th July 1962] *[திரு. எம். ஜி. ராமச்சந்திரன்]*

இந்த நிதி நிலை அறிக்கையை எங்கள் எண்ணப்படி ஓரளவுக்கு திருத்தி மக்களுக்கு நன்மை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

**திரு. எஸ். ஆர். பி. பொன்னுசாமி செட்டியார் :** தலைவரவர்களே, இந்த வருட நிதி நிலை அறிக்கையைத் தயாரித்த கனம் அமைச்சர வர்களை மிகவும் பாராட்டுகிறேன். இது அவர் நிதியமைச்சராக பொறுப்பேற்ற பிறகு முதல் அறிக்கையாகும். இந்த அறிக்கை பிரசுரத்திற்கு முன்னால் அவர்கள் முன்னுரை கொடுத்திருக் கிறார்கள். பின்னால் பின்னுரையும் கொடுத்திருக்கிறார்கள். இந்த நிதி நிலை அறிக்கையை, பின்னாலிருக்கும் பின்னுரையைப் பார்த்தால்தான், நன்கு புரிந்து கொள்ள முடியும் என்று கருது கிறேன். பின்னுரையில் அழகாகச் சொல்லியிருக்கிறார்கள். நூற்றுக்கணக்கான வருஷமாக அந்நிய ஆதிக்கத்தின்கீழ் இருந்து வாழ்க்கை வளம் பெற முடியவில்லை. உலகத்தில் நம்மைப்போன்றி ருக்கும் நாடுகள் 100 அல்லது 150 வருடங்களுக்கு முன்னால் இருக் கின்றன. மிகப் பிற்போக்காக இருக்கும் நம் நாட்டை வளப் படுத்த வேண்டுமென்றால், கொஞ்சம் வேகமாகச் சென்றுதான் ஆக வேண்டும். இடைக் காலத்தில் மக்கள் கஷ்டத்தைப் பொறுத்துக் கொள்ள வேண்டுமென்று சொல்கிறார்கள். அந்த அடிப்படையை வைத்துப் பார்த்தால், வரி விதிப்பு என்பது எல்லோருக்குமே கொஞ்சம் கஷ்டம்தான். இல்லை என்று சொல்லவில்லை. இருந் தாலும் அன்றாடம் நமது வளர்ச்சியைப் பார்க்கும்போது, நாம் எந்த வளர்ச்சியை அடைய விரும்புகிறோமோ, அந்த வளர்ச்சியை அடைய விரும்புகிறபோது, கொஞ்சம் கஷ்டங்கள் கொடுக்கத்தான் வேண்டும் என்ற முடிவுக்குத்தான் வர வேண்டியிருக்கிறது. பல அங்கத்தினர்கள் பேசினார்கள். வரிகள் கூடாது என்று எல்லாரும் சொல்கிறார்கள். வரிகள் இல்லாமல் எல்லா வேலைகளையும் செய்ய முடியுமானால், நான் அதை வரவேற்கத் தயாராயிருக்கிறேன் வேகமான வளர்ச்சி வேண்டும் எனும் போது, அங்கேதான வருகிறது சிக்கல். அந்தச் சிக்கலைத் தாங்கும் நிலையை மக்கள மத்தியில் நாம் தான் சொல்லவேண்டும். எனக்கு முன்பு பேசிய கனம் அங்கத்தினர் எம். ஜி. ராமச்சந்திரன் அவர்கள் சொன்னார் கள். இந்த சபையில் அடுத்த 5 ஆண்டுகளுக்கு இந்த ராஜ்யத்தை எந்த முறையில் நிர்வாகம் செய்வது, மக்களுக்கு எந்த முறையில் நன்மை செய்ய வேண்டும் என்பதை அடிப்படையாக வைத்து சபை நடக்க வேண்டும் என்பதை நான் மனப்பூர்வமாக ஆதரிக் கிறேன். அடுத்த ஐந்து வருஷங்களுக்கு அரசாங்கத்தின் பொறுப்பேற்றிருக்கும் அமைச்சர்கள் திட்டமிட்டிருக்கிறார்கள். அதிலுள்ள குற்றங் குறையைச் சொல்லி, நல்லதை ஆதரித்து, குறையை நிவர்த்தி செய்ய வேண்டுமென்றால், அதையும் சொல்லித் திருத்த வேண்டுமென்றால், சொல்லித் திருத்த வேண்டிய கடமை தான் அங்கத்தினர்களுக்கு உண்டு. அந்த வகையில் பார்த்தால் இன்றைய தினம் உள்ள நிலையில் இன்று தயாரிக்கப்பட்ட நிதி நிலை அறிக்கையை ஒத்துக் கொள்ளத்தான் வேண்டும். 4-50 p.m.

ஆனால் வரி போட வேண்டாமென்று நான் சொல்லவில்லை என்றாலும்கூட, பல அங்கத்தினர்கள் சொல்லியபடி, யார் தாங்கு வார்கள், யார் தாங்கமாட்டார்கள் என்பதைப் பார்த்து, பரிசீலனை

செய்து, போட வேண்டியதுதான் நியாயம். அந்த அளவில் நன்ருகப் பரிசீலனை செய்துதான் போட்டிருப்பார்கள் என்று நினைக்கிறேன். அந்தப் பரிசீலனை ஒரு புறமிருக்க, இங்கேயுள்ள அங்கத்தினர்கள் எல்லாம் கொடுத்த யோசனையை வைத்து மறு பரிசீலனை செய்து பார்க்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இன்று நிதி நிலை அறிக்கை வரும் நேரத்தில், சென்னை ராஜ்யத்தில் இருக்கக்கூடிய நம் எல்லோருக்கும் கண் முன் நிற்பது நமது Electricity —மின்சாரம்— நவீன வாழ்க்கையில் மின்சாரம் இல்லை என்ருல், உலகமே இல்லை என்ற நிலைதான் இருக்கிறது. நமது ராஜ்யத்தைப் பொறுத்தவரை, உண்மையில் நமது மின்சார வளர்ச்சி மிகவும் பெருமைப் படவேண்டிய நிலையில் உள்ளது. இல்லை என்று சொல்லவில்லை. சென்ற 5 வருஷமாக நமது மின்சார வளர்ச்சியை அகில இந்திய ரீதியில் இருக்கும் ராஜ்யங்களெல்லாம் பாராட்டுகின்றன. நாமும் பெருமையடைந்தோம். ஆண்டவனுக்குப் பொறுக்கவில்லை என்று சொல்ல வேண்டும். ஒரு கண் திருஷ்டி. திடீரென்று இயற்கை நமக்குச் சாதகமாக இல்லாத காரணத்தால், நமது நிலை எவ்வளவு பெருமைப் பட்டோமோ அவ்வளவுக்கு மோசமான நிலை வந்து விட்டது. இது யார் மீதும் குற்றமில்லை. அரசாங்கத்தின் மீதும் குற்றமில்லை. ஆனல் இந்த சந்தர்ப்பத்தை வைத்து இதிலிருந்து நாம் ஒரு படிப்பினை தெரிந்து கொள்ள வேண்டும். எப்போதுமே இயற்கையை நம்பி இருக்கும் மின்சாரத்தில் எதிர்பாராத சந்தர்ப்பங்களில் இந்த கோளாறுகள் வரும். பெரும் தொழில்களை எடுத்துப் பார்த்தால், நம் ராஜ்யத்தில் இரண்டாம் திட்டத்தில் பல புதிதாக வந்திருக்கின்றன. அவற்றில் பல தொழில்கள்—Continuous process—என்று சொல்வார்கள்—ஒரு நாள் நிறுத்தினல், ஒரு மாதத்துக்குள்ள முதல் நஷ்டமாகும். அப்படிப்பட்ட தொழில்கள் இந்த ராஜ்யத்தில் அமைந்திருக்கின்றன. ஒரு நிமிடம்கூட Electricity fail ஆகக் கூடாது. அதை எல்லாம் நஷ்டமில்லாமல் மக்களுக்கு இடைஞ்சல் இல்லாமல் காப்பாற்ற வேண்டுமென்ருல், இயற்கையை நம்பியிருக்கும் மின்சாரம் தவிர அனல் மின்சார நிலையத்தை அதிகப்படுத்த வேண்டும். இந்த ராஜ்யத்தில் கோவையைச் சேர்ந்த நாங்கள் பல வருஷமாக இதை வற்புறுத்தி வருகிருேம். அரசாங்கம் செய்யவில்லை என்ருலும், தனிப்பட்டவர்கள் செய்யத் தயார் என்று சொல்லி அரசாங்கமும் ஆமோதித்து, Planning Commission ஏதோ தடை செய்வதாகக் கேள்விப்பட்டேன். அது உண்மையாக இருக்குமானல், நமது அமைச்சரவையை வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறேன், வலியுறுத்தி அதற்கு அனுமதி வாங்க வேண்டுமென்று. கோவை மாத்திரம் அல்ல. சென்னை, மதுரை, திருச்சி போன்ற தொழிற் துறையில் முன்னேறி உள்ள நகரங்களில்கூட அரசாங்கம் செய்ய வேண்டுமென்பதில்லை. தனியார் துறை முன் வருமானல், அதற்கு அனுமதி கொடுத்து எவ்வளவு முன்னேற வேண்டுமோ அவ்வளவும் அமைக்க வேண்டும். தேவையைக் கணக்கெடுத்துப் பார்த்து, ஒரு 60 per cent அனல் மின்சார நிலையம் இருக்க வேண்டும். அதற்கு

5th July 1962] [திரு. எஸ். ஆர். பி. பொன்னுசாமி செட்டியார்]

அரசாங்கம் கியாரண்டி கொடுக்க வேண்டும். நமது மின்சார நிலையங்களில் ஏராளமாக மின்சாரத்தைச் செய்து, அதன் உற்பத்தி விலையை வைத்து, பொதுமக்களுக்கு விநியோகம் செய்யலாம். அந்த முறையை அரசாங்கம் எடுத்துக்கொண்டுதான் இருக்கிறது. அதை நான் வற்புறுத்த விரும்புகிறேன். அனல் மின்சார நிலையங்கள் மாத்திரம் இல்லாமல், அணுசக்தி மின்சார நிலையம் வேண்டுமென்று சென்ற சில வருஷங்களாக தமிழ்நாடு அரசாங்கம் வற்புறுத்தி வருகிறது. இன்று அதில் எனக்கு தனிப்பட்ட முறையில் ஒரு சந்தோஷம். வருஷாவருஷம் தவருமல் வெளிநாடுகளுக்குச் சென்று வந்து கொண்டிருக்கிற கனம் அமைச்சர் வெங்கட்ராமன் அவர்கள் எலக்டிரிசிடி மந்திரியாக இருக்கிருர்கள். பல அணு மின்சார நிலையங்களைப் பார்த்தவர். ஒரு காலத்தில் இங்கிலாந்தில் அணு மின்சாரம் கொஞ்சம் விலை அதிகமாக இருக்கிறது என்பதனல், அதிகமாக அணு மின்சார நிலையங்களை ஏற்படுத்தவில்லை என்று மூன்று ஆண்டுகளுக்கு முன் இருந்தது. ஆனல் இன்று விஞ்ஞான வளர்ச்சி காரணமாக அணு மின்சார நிலையங்களைக் கூட குறைந்த விலையில் ஏற்படுத்த முடியுமென்றும், அதை அதிகமாக விருத்திப்படுத்தி வருகிருர்கள் இங்கிலாந்தில். அதை வைத்து நமது ராஜ்யத்தில் ஒன்றிரண்டு அணு மின்சார நிலையங்கள் அவசியம் ஏற்படுத்தவேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன். அதே சமயத்தில் அமைச்சர் அவர்கள் அதைக் கொண்டு வருவார்கள் என்ற நம்பிக்கையையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

(திரு. எல். எஸ். கரையாளர் தலைமை வகித்தார்)

கல்வித் துறையில், நமது ராஜ்யத்தைப் பொருத்த அளவில், மிகச் சிறந்த முன்னேற்றம் அடைந்திருக்கிறது என்பதை யாரும் மறுக்கமுடியாது. இன்றைய தினம் நகரங்களில் மாத்திரம் அல்ல. கிராமப் பகுதிகளில் சிறு சிறு கிராமங்களில் பார்த்தால்கூட ஏராளமான பிள்ளைகள் பெண்கள் எல்லாம் பள்ளிகளுக்குச் சென்று படித்து வருகிருர்கள். எப்போது இந்த நிலை வந்ததோ, எப்போது ஆண்களும் பெண்களும் சரி நிகர் என்று நாம் ஒத்துக் கொண்டோமோ, அந்த நிலையில் பெண்கள் பள்ளிகளும் ஏராளமாக ஏற்படுத்தப்படவேண்டும். அதற்குத் தனிப்பட்ட முறையில் சலுகைகள் அளிக்கிருேம் என்று அமைச்சர் அவர்கள் சொல்லியதை நான் மிகவும் பாராட்டுகிறேன். பெண்கள் ஹைஸ்கூல்களும், காலேஜுகளும், பாலிடெக்னிக்குகளும், எவை வந்தாலும், அவற்றிற்கு, எஜுகேஷன் கோட்டில் இருக்கிறபடி சாதாரணப் பள்ளிகளுக்குக்கொடுப்பதைப் போன்ற சலுகைகளை அதிகமாகக் கொடுக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். மந்திரி அவர்களும் சொல்லியிருக்கிருர்கள் அதிகமான சலுகைகள் கொடுக்கப்படுமென்று. அதற்காகப் பாராட்டுகிறேன். கட்டிடங்கள் கட்டுவதாக இருந்தால் ஹைஸ்கூல்களுக்கு ரூ. 35,000 கிராண்ட் இருக்கிறது. அதற்கு மேல் கிடையாது. முன்பெல்லாம் பள்ளிக் 5-00 p.m. கூடங்கள் கட்டுவதாக இருந்தால், அரசாங்கம் பாதித் தொகை மானியமாகக் கொடுக்கும் வழக்கம் உண்டு. ஆண்கள் கல்லூரிக்காக ரூ. 35,000 என்று வைத்திருந்தாலும்கூட, பெண்கள்

[திரு. எஸ். ஆர். பி. பொன்னுசாமி செட்டியார்] [5th July 1962

கல்லூரிகளுக்கு இன்னும் அதிகமாகக் கொடுக்கவேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். அதே மாதிரி சென்னையில் ஒரு பாலிடெக்னிக் பெண்களுக்கு வருவதை வரவேற்கிறேன். அதே சமயத்தில் கோவை, மதுரை போன்ற நகரங்களில் ஒரு பாலிடெக்னிக் வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மதுரையைப் பொருத்தவரையில், தனியார் துறை அதற்குத் தயாராக இருக்கிறது. அரசாங்கம் எப்போது அனுமதி கொடுக்கத் தயாராக இருக்கிறதோ, அப்போதே அதை ஆரம்பிக்கத் தயாராக இருக்கிறார்கள் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். எனக்கு முன்பு பேசிய இப்போது தலைமை வகிப்பவர்கள் சொன்னார்கள், வைத்திய வசதிகளுக்கு இன்னும் கொஞ்சம் அதிகமாக ஒதுக்கப்பட வேண்டுமென்று. பணம் மாத்திரம் அதிகமாக ஒதுக்கிவைத்தால் போதாது. நமக்கு இன்னும் அதிகமாக டாக்டர்கள் தேவை. நானும் அதைக் கேட்டிருக்கிறேன். பல தலைவர்கள் வந்து இப்போது இருக்கிற டாக்டர்களை அணுகி, 'நகர்ப்புரங்களில் மாத்திரம் நீங்கள் சேவை செய்கிறீர்கள். கிராம மக்களுக்கு வைத்திய வசதி சரியான முறையில் அமையவேண்டுமென்றால், கிராமங்களுக்குச் சென்று சேவை செய்யுங்கள்' என்பதாக வேண்டிக்கொள்கிறார்கள். நான் சொல்கிறேன், அது அவசியமில்லை. நமது ராஜ்யத்தில் வைத்தியக் கல்லூரிகள் குறைவாக இருப்பதால்தான், அந்தப் பிரச்னை வருகிறது. இன்னும் இரண்டு மூன்று வைத்தியக் கல்லூரிகள் ஏற்படுத்தி அதிகமான டாக்டர்கள் வருவதற்கு வாய்ப்பு அளித்தால் தானாகவே அவர்கள் கிராமத்திற்குப் போவார்கள்.

**திரு. எஸ். கே. சம்பந்தன் :** அப்போதும் போகச் சொல்ல வேண்டும். தானாகப் போகமாட்டார்கள்.

**திரு. எஸ். ஆர். பி. பொன்னுசாமி செட்டியார் :** அவர்களை அதிகமாக ஆக்கவேண்டும். கோவை நகரத்தைப் பொறுத்தவரையில், பல வருஷங்களாகச் சொல்லி வருகிறோம். தனியார் துறையில் கொடுத்தாலும் சரி, அரசாங்கம் ஏற்றுச் செய்தாலும் சரி, 20 லட்சம், 40 லட்சம் ரூபாய் என்று நகரத்தில் உள்ளவர்கள் கொடுக்கத் தயாராக இருக்கிறார்கள். அப்படி இருக்கும்போது, அரசாங்கம் ஏன் இதைச் செய்யக்கூடாது, ஏன் செய்யத் தயாராக இல்லை என்று எனக்குத் தெரியவில்லை. அரசாங்கமே நடத்துவதாக இருந்தாலும், வாருங்கள், வேண்டிய வசதிகள் கோவையில் இருக்கின்றன என்று நான் சொல்லிக்கொள்கிறேன். கோவை, மதுரையை மட்டும் நான் சொல்லவில்லை. இன்னும் பல மெடிகல் கல்லூரிகள் வேண்டும். மெடிகல் கல்லூரி என்றால் பேயோ பிசாசோ என்ற ஒரு அச்ச நிலையை இழுத்து பிடித்துக் கொண்டிருக்கிறார்கள். எங்கு பார்த்தாலும் பாலிடெக்னிக்குகள், இன்சினியரிங் கல்லூரிகள் என்று ஏற்படுத்திக்கொண்டிருக்கும்போது, மெடிகல் கல்லூரி என்றால், ஏன் முன்வரவில்லை என்று எனக்குத் தெரியவில்லை. நமக்கு அதிகமாக டாக்டர்கள் வேண்டும். அதற்குக் கல்லூரிகள் அதிகமாக வேண்டும்.

**திரு. வி. எம். சுரேந்திரம் :** ரொம்பப் பேய் வந்தால் எல்லோரும் பயப்படுவார்கள்.

5th July 1962]

**திரு. எஸ். ஆர். பி. பொன்னுசாமி செட்டியார்:** இப்போது பயம் தேவையில்லை. எங்கு பார்த்தாலும் லைட் போட்டிருக்கிறோம். இந்த ஆண்டிலிருந்து அல்லது அடுத்த ஆண்டிலிருந்து இரண்டு கல்லூரிகள் வர ஏற்பாடு செய்யவேண்டும். வருஷத்திற்கு ஆயிரம் டாக்டர்கள் தமிழ்நாட்டிலிருந்து வெளிவரும் நிலைமை ஏற்பட்டால், வைத்தியப் பிரச்னை நல்லமுறையில் தீர்ந்துவிடு மென்று கருதுகிறேன். அதே மாதிரி யுனிவர்சிடி. இது ஒரு பெரிய பிரச்னை. பல ஆண்டுகளாக யுனிவர்சிடி பெயரைச் சொல் வதற்குக்கூட யோசனை செய்யும் காலம் உண்டு. சென்னையைப் பொறுத்தவரையில், தமிழ்நாட்டில் இரண்டு யுனிவர்சிடிகள்தான் இருக்கின்றன. நான் கேட்க விரும்புகிறேன், ஏன், நான்கைந்து இருந்தால் என்ன? உத்தரப் பிரதேசத்தில் ஐந்தாறு இருக்கிறது.

**திரு. கே. ராஜாராம்:** ஒரு கோடி ஜனத்தொகைக்கு ஒரு யுனிவர்சிடி.

**திரு. எஸ். ஆர். பி. பொன்னுசாமி செட்டியார்:** அப்படிப் பார்த்தாலும், இன்னும் நமக்கு வரவேண்டும். இப்போது மதுரைக்கு ஒன்று வருகிறது. அதுபோல, கோவைக்கு வரவேண்டும்.

**திரு. எஸ். கே. சம்பந்தன்:** அதிகமான யுனிவர்சிடிகள் வருவ தால், என்ன லாபம்? எந்தவிதத்தில் கோயம்புத்தூருக்கோ அல்லது வேறு இடத்திற்கோ வருவதில் லாபம் என்பதை விளக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**திரு. எஸ். ஆர். பி. பொன்னுசாமி செட்டியார்:** எதற்கும் வேண்டாமென்று சொல்லவில்லை. யுனிவர்சிடி கமிஷன் யோசனை செய்து அதைச் சொல்லியிருக்கிறார்கள். மதுரைக்கு வேண்டா மென்று சொல்லவில்லை. கோவைக்கும் வரட்டும். இதில் என்ன தரித்திரம் வேண்டும்? நான் கோவையைச் சேர்ந்தவன். எனக்குப் பேசக்கூடிய வாய்ப்பு கிடைக்கும்போதெல்லாம், சாதாரணமாகக் கோவை நகரம்தான் என் முன்னால் வந்து நிற்கும். அப்படிச் சொல்லும்போது, கோவை நகரத்தில் இருக்கிற முக்கியமான பிரச்னை குடிதண்ணீர் பிரச்னைதான் முன்னால் நிற்கிறது. சிறுவாணி திட்டம் 1956-ல் கோவை நகரத் தின் ஜனத்தொகை ஒரு லட்சம் இருக்குமென்று நினைத்து தீட்டப் பட்ட திட்டம். இன்றைய தினம் கிட்டத்தட்ட நான்கு லட்சம் ஆய்விட்டது. தொழில் வளர்ச்சி காரணமாக நகரம் நாளுக்கு நாள் வளர்ந்து வருகிறது. நகரத்தில் குடிசைகள் பெருகிக் கொண்டே போகின்றன. எந்த நிலைக்கு நகரம் செல்லுமென்று நினைக்கவே முடியவில்லை. எங்கு பார்த்தாலும் தண்ணீர்ச் சண்டை. நகரத்தில் மாத்திரமில்லை. இப்போது நகரசபையிலும் வந்துவிட்டது. இன்றைய தினம் உங்களுக்கு நன்றாகத் தெரியும். கோவை நகரத்தில் திராவிட முன்னேற்றக் கழகக் கட்சி நண்பர் களும், கம்யூனிஸ்ட் நண்பர்களும் ஒன்றாகச் சேர்ந்து பொறுப் பேற்று நடத்துகிறார்கள். தி.மு.க. நண்பர்கள் சொல்கிறார்கள், கம்யூனிஸ்ட் அங்கத்தினர் இருக்கும் வார்டுக்குத்தான் அதிகமாகத் தண்ணீர் விடப்படுகிறது என்று. அவர்கள் தி.மு.க. அங்கத்தினர்

[திரு. எஸ். ஆர். பி. பொன்னுசாமி செட்டியார்] [5th July 1962

வார்டுக்கும் போகிறது என்கிறார்கள். இந்தத் தண்ணீர்ச் சண்டை மக்கள் மத்தியிலிருந்து நகரசபைக்கும் சென்றுவிட்டது. நான் தவறாக இதைச் சொல்லவில்லை. அங்கு தண்ணீர்க் கஷ்டம் அப்படியிருக்கிறது. ஒரு லட்ச ஜனங்களுக்குப் போடப்பட்ட திட்டத்தைக் கொண்டு, 4 லட்ச ஜனங்களுக்கு எப்படித் தண்ணீர் கொடுக்க முடியும்? கண்டிப்பாக முடியாது. நகரத்தின் வளர்ச்சியைக் கணக்கில் கொண்டு, 1¼ கோடி ரூபாயில் சிறுவாணியில் அணை கட்டவேண்டுமென்று 1956-ல் திட்டம் போட்டோம். அது இன்னும் செயல்படாமல் இருக்கிறது. இடையில், அதற்கு ஒரு காரணம் இருந்தது. **State Reorganisation** அதாவது மாநில புனரமைப்பின் காரணமாக, அணை கட்டுகிற பகுதி கேரளத்திற்குச் சென்று விட்டது. அதனால் திட்டத்தை நிறைவேற்ற முடியவில்லை என்றார்கள். ஆனால் இன்றைக்குக் கேரள அரசாங்கத்துடன் ஒப்பந்தம் செய்து கொண்டு, பரம்பிக்குளம் வந்திருக்கிறபோது, இந்தச் சிறுவாணி பிரச்சனையைத் தீர்ப்பது பெரிய காரியமல்ல. ஆகவே எவ்வளவு சீக்கிரம் சிறுவாணியில் அணைகட்டமுடியுமோ அவ்வளவு சீக்கிரம் செய்ய வேண்டுமென்று வற்புறுத்த விரும்புகிறேன்.

கவர்னர் பெருமான் உரையின் மீது பேசும் போது நம்முடைய ராஜ்யத்தின் தொழில் வளர்ச்சியைப்பற்றிப் பேசினேன். அப்போது நான் குறிப்பிட்டேன். இந்த ராஜ்யத்தில் புதிதாகத் தொழில் ஆரம்பிக்கிறவர்களுக்குச் சரியான முறையில் விவரம் கிடைப்பதில்லை. அதற்காக போர்டு ஏற்படுத்தி யார் யார் தொழிலை ஆரம்பிக்க விரும்புகிறார்களோ, அவர்களுக்கு, அவர்கள் எந்தெந்தத் தொழிலை ஆரம்பிக்க விரும்புகிறார்களோ, அந்தந்தத் தொழிலைப்பற்றிய விவரங்களைத் தெளிவு படுத்த **Advisory Council** மாதிரி, ஒரு ஸ்தாபனத்தைத் தமிழ் நாட்டு சர்க்கார் ஏற்படுத்த வேண்டுமென்று சொன்னேன். அமைச்சரவர்கள் அந்த யோசனையை ஏற்றுக்கொண்டு, ஒரு **Advisory Board** ஏற்படுத்த ஏற்பாடுகள் செய்திருப்பதாக நிதி நிலை அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதை நான் மனப் பூர்வமாக வரவேற்கிறேன். போர்டு வருவதன் காரணமாக, தமிழ் நாட்டின் எல்லாப் பக்கங்களிலும் பெரும் தொழில்கள், நடுத்தரத் தொழில்கள், சிறு தொழில்கள் ஏராளமாகப் பெருகி, நாட்டு மக்கள் எல்லோருக்கும் நல்ல முறையில் வேலை வாய்ப்பளிக்க வசதியாக இருக்குமென்று நம்புகிறேன். அதே சமயத்தில் இந்த **Board** கொஞ்சம் சீக்கிரமாக வேலை செய்ய வேண்டும், போர்டு ஏற்படுத்தி விட்டால் மட்டும் போதாது. இப்போது தொழில் துறை போகிற வேகத்தில் நாம் காலதாமதப் படுத்தினால், அவ்வளவுக்கு நமக்கு நஷ்டம்.

5-10 p.m. இன்னொன்று சொல்ல விரும்புகிறேன். எனக்கு முன்னால் பேசிய நண்பர்கள் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் இளைஞர், ஓடியாடி வேலை செய்யக்கூடிய திறமையுள்ளவர் என்பதாகத் தெரிவித்தார்கள். அது அவ்வளவையும் நானும் ஒத்துக் கொள்ளுகிறேன். எனக்கு ஒரு ஆசை தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில். குறைந்தது ஐந்து அல்லது ஆறு நகரங்களாவது லட்சிய நகரங்களாக இருக்க வேண்டும். நல்ல பாதாள

5th July 1962] [திரு. எஸ். ஆர். பி. பொன்னுசாமி செட்டியார்]

சாக்கடை, சுகாதார வசதி, குடிதண்ணீர் வசதி, அழகான வீடுகள், காற்று வசதியுள்ள சிறு வீடுகள், இந்த வசதிகளுடன் லட்சிய நகரங்களாக ஏற்படவேண்டுமென்பது எனக்கு ஆசை. ஏன் அதைக் கூறுகிறேன் என்றால், அப்படி ஏற்பட்டால், அவற்றைப் பார்த்தாவது பக்கத்தில் இருக்கிற பிற நகரங்கள், கிராமங்கள் சுகாதார வசதியை ஏற்படுத்திக் கொள்ளுகிற நிலைமை ஏற்படும். அதைச் செய்வதற்கு நம்முடைய ராஜ்ய சர்க்காருக்குப் பணமில்லை என்று எனக்குத் தெரியும். பண மில்லாமல் எல்லாவற்றையும் செய்ய வேண்டுமென்று சொல்லுகிறவன் நானல்ல. பணமில்லாமல் ஒன்றும் செய்ய முடியாது. சென்னையை லட்சிய நகரமாக்க வேண்டுமானால், சென்னை கார்ப்பொரேஷன் 10 கோடி ரூபாய் கேட்பார்கள். கோவை, திருச்சி, சேலம் போன்ற நகரங்களுக்கு 4 கோடி ரூபாய் வேண்டும். சென்னை ராஜ்யத்தில் 5 அல்லது 6 நகரங்கள் லட்சிய நகரங்கள் ஆக வேண்டுமானால், 20, 25 கோடி ரூபாய் தேவைப்படும். கோடிக் கணக்கான ரூபாய் செலவில் மத்திய சர்க்கார் திட்டங்களைப் போடும் போது, இந்த லட்சியத்தை நிறை வேற்ற 20, 25 கோடி ரூபாய் மத்திய சர்க்காரிடமிருந்து வாங்க முடியாதா? மத்திய சர்க்காரைக் கேட்டு ஏன் வாங்கக் கூடாது என்று கேட்க விரும்புகிறேன். அகில இந்திய ரீதியில் ஸ்தல ஸ்தாபன அமைச்சர்கள் மாநாடு நடத்துவதுண்டு. அந்த சந்தர்ப்பத்தில் அமைச்சரவர்கள் இதை வலியுறுத்தி, அந்தத் தொகையை மத்திய சர்க்காரிடமிருந்து மான்யமாகப் பெற்று வந்து 5, 6 நகரங்களை லட்சிய நகரங்களாக்க வேண்டுமென்பது என்னுடைய அவா என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொண்டு, எனக்குப் பேச வாய்ப்பளித்ததற்காக மனமாற நன்றி தெரிவித்து, என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

(டெபுடி சேர்மன் தலைமை வகித்தார்.)

* திரு. பி. கே. நல்லசுவாமி: மன்றத் துணைத் தலைவரவர்களே, இந்த நிதி நிலை அறிக்கையை ஆதரித்துச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். எனக்கு முன் பேசிய சில அங்கத்தினர்கள், ஆதரித்துப் பேசுகிறோம் என்று சொல்லி, பின்னால் வேண்டுகோள்கள் எல்லாம் விடுக்கின்றார்கள் என்றார்கள். வாஸ்தவம் தான். நம்முடைய இந்த நாட்டிலே மூன்று ஐந்தாண்டுத் திட்டமல்ல, 10 ஐந்தாண்டுத் திட்டம் போட்ட பிற்பாடு கூட, நமக்கு வேண்டிய தேவைகள் இருந்துகொண்டேயிருக்கும். நம்முடைய கோரிக்கைகள் பூர்த்தியாக, பூர்த்தியாக இன்னும் புதிய கோரிக்கைகள் ஏற்பட்டுக்கொண்டேதான் இருக்கும். சொல்லிக்கொண்டேதான் இருக்க வேண்டும். நான் கூட ஏதாவது ஒரு கோரிக்கையைச் சொல்லுகிறேன், குற்றத்தைக் கண்டு பிடிக்கிறேன் என்றால், நமக்கு இந்த நாட்டில் நல்ல அரசாங்கம் நடை பெற வேண்டும் என்ற லட்சியத்தை வைத்துக்கொண்டு பேசுகிறோம் என்று அர்த்தமே ஒழிய, ஆளும் கட்சியில் இருக்கிற நாங்கள், அரசாட்சியில் இருக்கிற தவறுகளை எடுத்துக்காட்ட கட்சி சுதந்திரம் கொடுத்திருக்கிறது என்று

காட்டுகிறதே தவிர அதைக் குறைபாடாக எந்த அங்கத்தினரும் நினைப்பது சரியல்ல என்று சொல்லிக்கொண்டு, முதலில் தேசீய ஐக்கியத்தைப்பற்றிச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். அந்த விஷயத்தைப்பற்றி இந்த சபையிலும், கீழ் சட்ட சபையி லும் சில அங்கத்தினர்கள் பேசியிருக்கிறார்கள். அதிலும் குறிப்பாக பாடப்புத்தகத்தைப்பற்றி எல்லாம் பேசினார்கள். என்னுடைய பையன் இரண்டு ஆண்டுகளுக்கு முன் ஐந்தாவது வகுப்பு தமிழ்ப் பாடப்புத்தகத்தைப் படித்துக்கொண்டிருந்தபோது, நான் அந்தப் புத்தகத்தைப் பார்க்க நேரிட்டது. அதைப் பார்த்த வுடன் எனக்கே சந்தேகம் வந்து விட்டது. நம்முடைய தாய் நாடு இந்தியாவா, அல்லது தமிழ் நாடா என்ற சந்தேகம் வரக் கூடிய அளவில் பாடம் எழுதப்பட்டிருந்தது. சில நாட்களுக்கு முன் Mail பத்திரிகையில் "Way of the World" என்ற தலைப்பில ஒரு கார்டூன் போட்டிருந்தார்கள். இந்திய படத்தைப் போட்டு, நம்முடைய நாடு தமிழ் நாடா, இந்தியாவா என்ற சந்தேகம் பையன் மனதில் வருகிற மாதிரி ஒரு கார்டூன் அழகாகப் போட் டிருந்தார்கள். இங்கே இராமலிங்கம் பிள்ளை அவர்களின் கவிதைகள், பாரதியார் கவிதைகள் இவற்றை மேற்கோளாகக் காட்டி, இவைகளெல்லாம் தேசிய ஐக்கியம் என்ற பெயரால் விடப் பட்டுவிடுமோ என்று அஞ்சுவதாகக் குறிப்பிட்டார்கள். "தமிழன் என்று சொல்லடா, தலை நிமிர்ந்து நில்லடா" என்று ராமலிங்கம் பிள்ளை பாடினார்; "செந்தமிழ் நாடென்னும் போதினிலே இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே" என்று பாரதியார் பாடினார் என்று கூறினார்கள். அந்தக் கவிதைகள் பூராவையும் குறிப்பாகப் படித்திருந்தால், ராமலிங்கம் பிள்ளை இந்தியப் பண்பாட்டை, இந்திய ஒற்றுமையை எவ்வளவு வற்புறுத்தி அவர்களுடைய பாடல்களில் பாடியிருக்கிறார் என்பதை அறிந்து கொண்டிருப் பார்கள். அது மாத்திரமல்லாமல், பாரதியாரை எடுத்துக் கொண்டால், அவருடைய உத்தமமான பாடல்களில் "வாழ்க வாழ்க பாரத சமுதாயம்" என்ற பாட்டு மிக உன்னதமான பாட்டு. சமதர்மத்தை அடிப்படையாகக் கொண்டு, இறைவன் எல்லா இடத்திலும் நிறைந்திருக்கிறான், ஒரு சமதர்ம சமுதாயம் வேண்டு மென்று காட்டக் கூடிய பாட்டு. அது மாத்திரமல்ல. "வாழிய செந்தமிழ், வாழிய நற்றமிழர், வாழிய பாரத மணித்திரு நாடு" என்று பாரதியார் சொல்லுகிறார். பாரதியார் பாடலை மேற் கோள் காட்டும் போது, இது ஏன் அவர்கள் ஞாபகத்துக்கு வர வில்லை என்று நினைக்கும் போது, ஏதோ தங்களுக்கு வேண்டி யதை மட்டும்—ஒரு பழமொழி உண்டு, அது சற்று கடுமையாக இருக்கும், ஆகையால் அதைச் சொல்ல விரும்பவில்லை, ஒரு பகுதி யை மட்டும், தங்கள் காரியத்துக்கு வேண்டிய ஒரு பகுதியை மட்டும், '**Devil quoting the Scripture**' என்பதைப்போல—இந்தக் கடுமையான பழமொழியைச் சொல்லவேண்டாமென்று நினைத்தேன், ஆனால் சொல்லிவிட்டேன்—எடுத்துச் சொல்லி யிருக்கிறார்கள். தேச ஐக்கியத்தை ஒத்துக்கொள்ளாத பாரதியார் பாடல் கிடையாது. "மன்னும் இமயமலை எங்கள் மலையே" என்ற பாடலை மறந்து விட்டு, அல்லது மறைத்து விட்டு பாரதியார் பாடலை மேற்கோள் காட்டியிருக்கிறார்கள்.

5th July 1962] [திரு. பி. கே. நல்லசுவாமி]

அப்படிக் காட்டினால், கன்யாகுமரி முதல் இமயம் வரையில் நம்முடைய நாடு என்பதை உணர்ந்து, நாட்டின் சுதந்திரத்துக்காக அறப்போரில் ஈடுபட்டு, பல தியாகங்களைச் செய்த திரு. சுப்பரமணியம் போன்றவர்களுக்கு உணர்ச்சி ஏற்படாது என்று யாரும் கருதக் கூடாது. ஏன் உங்களுக்கு வேண்டியதை மாத்திரம் எடுத்துக்கொள்ள வேண்டும், "வாழ்க பாரத சமுதாயம்" என்ற பாடலை ஏன் காட்டவில்லை என்று இன்னொருவர் கேட்கக் கூடாதா? திராவிட நாட்டைப்பற்றி யாரும் பாடவில்லை.

திரு. க. அன்பழகன்: மனோன்மணியம் சுந்தரம் பிள்ளை பாடியிருக்கிறார்கள்.

திரு. பி. கே. நல்லசுவாமி: எனக்குத் தெரியும், திராவிட மொழிகளைப்பற்றிப் பாடியிருக்கிறார். நான் அதையும் படித்திருக்கிறேன். அந்த திராவிடம் என்பது வேறு. அதற்கு என்ன அர்த்தம் என்று இப்போது வாதம் பண்ணிக் கொண்டிருக்க நேரமில்லை.

திராவிடம் என்பது வேறு. அதைப்பற்றி விவாதிப்பதற்கு இது இடமில்லை. நேரமும் இல்லை. மனோன்மணீயத்திலுள்ள திராவிடம் என்ன என்று பேசுவதற்கு இது இடமல்ல என்று விட்டுவிடுகிறேன். சரியான மேற்கோள் கொடுக்கவேண்டும். தங்களுக்கு வேண்டியதை எடுத்துக்கொண்டு மேற்கோள் காட்டுகிறார்கள் என்பதைத்தான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

இந்த நாடு ஐக்கியமாக இருக்கவேண்டுமென்றால், அளவுக்கு மீறிய தாய் மொழிப்பற்று இருந்தால், நாடு ஒன்றாக இருக்க முடியாது. பாரதியார் கவிதையின் கருத்து இதுதான். "வாழிய செந்தமிழ், வாழ்க நற்றமிழர், வாழிய பாரத மணித்திரு நாடு"—என்று. அந்த அடிப்படையில் தேசியம் வளர்ந்து கொண்டுபோகிறது. நாட்டில் நாம் ஒரு அங்கமாக இருக்கிறோம், குடும்பத்தில் நாம் ஒரு அங்கமாக இருக்கிறோம் என்பதுதான் கொள்கை. இதனால் தமிழர் வீரத்தைக் குறைத்துச் சொல்லவில்லை.

திரு. க. அன்பழகன்: இப்போது அந்த வீரம் எங்கே போயிற்று? 5-20 p. m.

திரு. பி. கே. நல்லசுவாமி: இன்னமும் இருக்கிறது. எங்களைவிட தமிழர் வீரத்தைப்பற்றி யாராவது பேசியிருக்க முடியுமா என்பதைக் கேட்டுத் தெரிந்து கொள்ளட்டும். அந்த வீரம் இப்போதும் எங்களிடத்தில் இருக்கிறது. இந்த நாடு பூராவும் தமிழனுடையது என்று சொல்ல விரும்புகிறேன். டில்லியில் தமிழர்கள் 6 பேர் மந்திரிகளாக அரசாட்சி செய்கிறார்கள் என்பதை மறக்கக்கூடாது. நாமும் நாட்டை ஆள சக்தி படைத்தவர்கள். நமக்குரிய பங்கு கொடுக்க வேண்டுமென்று தான் சொல்ல வேண்டும். இன்று பழைய சரித்திரத்தைச் சொன்னால்கூட, அதில் பலவித மாறுபட்ட கருத்துக்கள் இருக்கின்றன. திரா

விடார்கள்கூட வெளியே இருந்து வந்தார்கள். அப்போது ஆராய்ச்சியே வேறு விதமாகத் திரும்பி விடும். திராவிடம் என்பது ஆப்பிரிக்கா வரைகூட பரவி விடக்கூடும். நாம் எண்ணிப் பார்க்க வேண்டியது இந்த நாட்டில் இம்மாதிரிப் பிரிவினை சக்திகள் இருப்பதால் என்னவாகும் என்பது. பாகிஸ்தான் பிரிந்தது என்ன ஆயிற்று? இன்று என்ன நிலையில் இருக்கிறது? அதே மாதிரி திராவிடநாடு பிரிந்தால் என்ன நிலை வரும் என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். நம் மாநிலத்திற்குக் குறைந்த நிதியை மத்திய அரசாங்கம் ஒதுக்கினாலோ, அல்லது நமக்குக் கொடுக்க வேண்டிய பங்கைக் கொடுக்காமல் இருந்தாலோ விட்டுக் கொடுப்பவர்கள் அமைச்சரவையிலோ, காங்கிரசிலோ யாரும் இல்லை என்பதை அவர்கள் உணர்ந்து கொள்ள வேண்டும். அந்த மாதிரி எடுத்துக்காட்டினால், யாரும் வரவேற்பார்கள். அதை நீக்க முயற்சிப்பார்கள். அளவு கடந்த மொழிப்பற்றும் மாநிலப் பற்றும் தேசிய ஐக்கியத்திற்கு விரோதமாக அமையும் என்பதைத் தான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அளவு கடந்த மாநில உணர்ச்சி தேசிய ஒருமைப்பாட்டைக் கெடுக்கிறது என்று வலியுறுத்த விரும்புகிறேன். மொழி அளவோடு இருக்கவேண்டும். தாய் சிறந்தவள் என்பதற்காக மற்ற எல்லாப் பெண்களையும் அவமரியாதை செய்யலாமா? அது வெறி ஆகக் கூடாது என்பதைத்தான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடி பட்ஜெட்டைப்பற்றிப் பேசுவதற்கு அதிக நேரம் இருக்காது என்று நினைக்கிறேன். ஆனால் வரிகளைப் பற்றி இரண்டொரு அபிப்பிராயத்தைத் தெரிவிக்க விரும்புகிறேன். நஞ்சை நிலத்திற்கு வரி போட்டது பற்றிப் பிரமாதமாக எதிர்ப்பு காட்டப்படுகிறது. நிலச் சீர்திருத்தக் கமிட்டியில் நான் இருந்தேன். மாகாணம் பூராவும் சென்று பார்த்தோம். கன்னியாகுமரியில் நிலத் தீர்வை மிகவும் குறைவு. பழைய வாய்க்கால் இருக்குமிடம். எங்கள் பக்கத்தில் காளிங்கராயன் வாய்க்கால் பகுதியில் 8 ரூபாய் தீர்வை இருந்தால் மேட்டூர் **L. B. P.** வாய்க்கால் பகுதியில் நாங்கள் 15 ரூபாய் கொடுக்கிறோம். அதே மாதிரி தஞ்சாவூரில் ரூ. 8 முதல் ரூ. 10 வரை நிலத் தீர்வை கொடுக்கிறார்கள். ரூ. 15 நாங்கள் தீர்வை கொடுத்து, மேலே நில கந்தாயம் கட்டுகிறோம். அதற்கு மேலே **Surcharge** இருக்கிறது. ஆனால் பழைய ஆயக்கட்டில் ரூ. 8 முதல் ரூ. 10 வரைதான். **Ceiling Bill** -ஐப் பார்த்தால் அது நன்றாக விளங்கும். இப்போது செய்திருப்பது ரொம்ப நியாயமானது. 50 சத விகிதம் உயர்த்துவது என்பதை விட்டு விட்டு நிலத் தீர்வை ரூ. 15 என்று இருந்தாலும் எல்லாவற்றுக்கும் சமமாக எல்லா நீர்ப்பாசனப் பிரதேசத்துக்கும் சமமாக இருக்கும் என்பது என்னுடைய கருத்து. எதிர்க்க நியாயமான காரணமில்லை. மூன்று போகம் விளையும் தஞ்சை போன்ற அதிக விளைச்சல் விளையுமிடத்தில் ரூ. 8 கொடுக்கிறார்கள். இதை அதிகப்படுத்தினால், என்ன தப்பு? இதுகூட ஏழைகளைப் பாதிக்கும் என்று சொல்வார்களோ என்னவோ?

5th July 1962] [திரு. பி. கே. நல்லசுவாமி]

அடுத்தபடி, பஸ்கட்டண உயர்வு பற்றிச் சொல்லப் பட்டது. எங்கள் ஜில்லாவில் தொழிலதிபர் மகாலிங்கம் யோசனை சொன்னார் இதை ஏற்ற வேண்டுமென்று. ஒரு மைலுக்கு பிரயாணியிடத்தில் இவ்வளவுதான் வாங்க வேண்டும் என்று இருக்கிறது. ஏற்கனவே 6½ பைசா இருந்தது. இப்போது 4 நயா பைசாவாக இருக்கிறது என்று நினைக்கிறேன். இதற்கு மேலே வாங்கவேண்டுமென்று அரசாங்கம் அனுமதி கொத்தாலொழிய வாங்கமுடியாது. எங்கோ ரூ. 2¼, 3 இருக்குமிடத்தில் ஒரு நான்கணு உயரும். மைலுக்கு இவ்வளவுதான் வாங்கலாம் என்று அரசாங்கம் நிர்ணயம் செய்திருக்கிறது. ஆனால் லாரியைப் பொறுத்தவரை, ஓலவு வாடகை (Freight) எல்லாம் கொஞ்சம் ஏறத்தான் செய்யும். விலைவாசி அதனால் ஏறத்தான் செய்யும்.

அடுத்தபடியாக High tension tariff இதனால் விலைவாசி ஏறும் என்று யாரோ பேசினார்கள். இந்த முதலாளிகளுக்கு ஒரு கண்ட்ரோலும் இல்லை. கச்சாப் பொருள்கள் (Raw materials) எல்லாம் அவர்களுக்கு கண்ட்ரோல் விலையில் கிடைக்கிறது. ஆனால் அவர்கள் விற்கும் பொருள்களுக்குக் கண்ட்ரோல் இல்லை. அவர்களைப் பாதிக்குமென்று யாராவது சொன்னால் அதை யாரும் நம்ப மாட்டார்கள். Low tension tariff குறிப்பாக விவசாயிகளைப் பாதிக்கும். 5 H.P. Pumpset வைத்திருப்பவர் ரூ. 25 அதிகம் கொடுக்கும்படி வரும். ஏற்கனவே குடும்ப உபயோகத்துக்கு 29 ந. பை. கொடுத்துவருகிறோம். இது மத்தியதர வகுப்பார் எல்லோரையும் பாதிக்கும். இதில் சற்று அரசாங்கம் கவனம் செலுத்திப்பார்க்க வேண்டும். மற்றபடி நகரப்புறங்களில் எல்லாம் ஐயாயிரமாக இருந்த நிலத்தின் விலை இப்போது ஐம்பதினாயிரமாக ஆகிவிட்டது. ஒரு செண்டு ஆயிரம் ரூபாய் விலையில் கோயம்புத்தூர் போன்ற இடங்களில் போய்க்கொண்டிருக்கிறது. அவர்களுக்கு வரிபோட்டால் தலைமுழுகிப்போய் விடுமென்று சொல்வது சரியில்லை. அடுத்தபடியாக, இந்த (பெட்டிங்) குதிரைப் பந்தயம் மீது வரிபோட வேண்டியதுதான். இதனால் எவ்வளவு பேர் நாசமாகிறார்கள், எவ்வளவு பேர்கள் எங்கள் ஊரிலிருந்து பெட்டிங்குக்கு வருகிறார்கள் தெரியுமா? அனேகம் பேர் வருகிறார்கள். நான் ஒரு சமயம் இதை வேடிக்கை பார்க்கப் போயிருந்தேன். அங்கு வருகிறவர்கள் ரிட்டர்ன் டிக்கெட் வாங்கிக்கொண்டுதான் போகவேண்டும். ஏனென்றால் திரும்பும்போது கையில் காசு இருக்காது. இதை அடியோடு ஒழித்துவிட்டால் நன்றாக இருக்குமென்பது என் அபிப்ராயம்.

கடைசியாக, ஒன்று சொல்லிக்கொண்டு முடித்துக்கொள்கிறேன். அமோனியம் சல்பேட் உரம் சரியான முறையில் விநியோகம் செய்யப்படுவதில்லை. வேண்டாத இடங்களுக்கு வேண்டாத காலங்களில் அது அனுப்பப்படுகிறது. பல பஞ்சாயத்து யூனியன்களுக்கு அனுப்பப்படுகிறது. அதில் சில நியாயமான யூனியனில் உள்ளவர்கள் இப்போது தேவையில்லை என்று திருப்பி அனுப்பிவிடுகிறார்கள். சில பேர்கள் அப்படிச் செய்வதில்லை. கள்ள மார்க்கெட்டிற்குப் போய் விடுகிறது. ஆகையால் இவற்றைச்

சரியான சமயத்தில் யூனியனுக்கு வேண்டிய அளவில் அனுப்ப வேண்டும். இல்லாவிட்டால் நிறுத்தி வைத்துக்கொண்டு பயிரிடும் காலத்தில் அதிகமாக அனுப்பலாம். அப்போதுதான் பிளாக் மார்க்கெட்டில் விற்பது குறையும். நான் ஒரு முறை போய்க் கேட்டேன். கொடுக்கவில்லை. பிளாக்கில் ரூ. 90 கொடுத்து வாங்குங்கள். மறுபடியும் வந்தால் ரூ. 85-க்கு அதை விற்றுவிடுங்கள். ஐந்து ரூபாய்தான் நஷ்டமாகும் என்று சொல்லுகிறார்கள். அதைபோல் வினியோகம் செய்யும்போது அவற்றைக் காலாகாலத்தில் செய்யவேண்டுமென்று கலெக்டருக்கு உத்தரவிட்டால், ஓரளவு பற்றுக்குறை நீங்குமென்று சொல்லிக் கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

5-30 p.m. திரு. வி. எம். சுரேந்திரராம்: உப தலைவர் அவர்களே, இந்த ஆண்டு பட்ஜெட்டை வரவேற்று சில வார்த்தைகள் பேசப் பிரியப்படுகிறேன். இந்த ஆண்டு அறிக்கையில் நமக்குச் சில வரிகள் போட்டிருக்கிறார்கள். எதிர்க்கட்சி உபதலைவர் அவர்கள் நேற்றுப் பேசியபோதும் " "I am welcoming this budget with mixed feelings" என்று கூறியிருப்பது மகிழ்ச்சி தருவதாகும். வரி கொடுக்கவேண்டுமென்றால், எல்லோருக்கும் கொஞ்சம் கஷ்டமாகத்தான் இருக்கும். அவர்கள் கேட்கிற சௌகரியங்களைப் பார்த்தால், அதற்குக் கணக்கே கிடையாது. சுதந்திரம் அடைந்த பிறகு பாரதியார் சொன்னதுபோல, எல்லோரும் இந்நாட்டு மன்னர் என்றபடி, ஒவ்வொருவரும் ஒவ்வொன்று செய்ய வேண்டுமென்று கேட்கிறார்கள். ரோடு, குடிதண்ணீர், பள்ளிக்கூடம், ஆஸ்பத்திரி என்று இப்படி யெல்லாம் கேட்கப்படுகிறது. அவற்றை எல்லாம் எப்படி நிறைவேற்றுவது? நிதி அமைச்சர் அவர்களுடைய சொந்தப் பணத்திலிருந்து செய்ய வேண்டுமா? வேறு வழி என்ன? மக்களிடத்தில் வரி போட்டு வசூலித்து அவ்வரிகளைக் கொண்டு மீண்டும் அவர்களுக்கே வசதி செய்து கொடுக்க வேண்டுமென்பதுதான் சர்க்காருடைய அவா. தொன்றுதொட்டு எந்த சர்க்காரும் எந்த அரசியல் கட்சிகளும் அவ்வப்போது ஆட்சி புரியும்போது, வரிபோட்டுத்தான் ஆட்சி நடத்தினார்களே தவிர, வரிபோடாமல் சர்க்கார் நடந்தது என்று சரித்திரமே இல்லை. அதேபோலத்தான் காங்கிரஸ் சர்க்காரும், அவர்களால் முடிந்தவரையில், எல்லாக் கட்சிகளையும்விட மக்களிடத்தில் அன்பு அதிகமாகக் கொண்டு ஒவ்வொன்றையும் செய்துவருகிறது. எதிர்க்கட்சியில் இருக்கிறோமே என்பதற்காக எதிர்க்கட்சிக்காரர்கள் எல்லாம் ஏதாவது சொல்லிக்கொண்டு இருக்கிறார்கள். மதிப்பிற்குரிய நண்பர் இந்த சபையைப்பற்றிப் பேசினார்கள். ராஜ்ய சபையில் நான் நான்கு வருஷம் இருந்திருக்கிறேன். கவுன்சிலைப்போலவே அதற்கு அந்தப் பெயர் உண்டு. பெரியவர்களாக இருந்து சர்க்காருக்கு "அட்வைஸ்" கொடுக்க வேண்டுமென்று இந்த சபையை ஏற்படுத்தியிருக்கிறார்கள். ஆனால் நாளுக்கு நாள் இந்த சபையையும் லோயர் சபையைப் போல மாற்றிக்கொண்டு போகிறார்கள். மதிப்பிற்குரிய லட்சுமணசாமி முதலியார் இருக்கிறார். பெரிய அறிஞர்கள் இருக்கிறார்கள். சில

எதிர்க்கட்சிக்காரர்கள் என்றால், அவர்கள் எல்லாவற்றையும் எதிர்த்துக்கொண்டுதான் இருக்கிறார்கள். ஆளும் கட்சியில் இருக்கிறவர்கள் அதற்குப் பதில் சொல்ல வேண்டியிருக்கிறது. முன்பு பேசிய சில அங்கத்தினர்கள் ஆளும் கட்சியைப்பற்றிக் குறை கூறினார்கள். நண்பர் வகாப் அவர்கள் முஸ்லீம்கள் இந்தியாவில் குறிப்பாக சென்னையில் படுகிற பாடு பரிதாபகரமாக இருக்கிறது என்று சொல்கிறார். இதற்குப் பதில் சொல்ல வேண்டாமா? அகில இந்தியா பூராவிலும் பார்த்திருக்கிறோம். 1947-க்குப் பிறகு இந்தியாவில் உள்ள முஸ்லீம்கள் பிரிந்து பாகிஸ்தானுக்குப் போனார்கள். இப்போது அங்கிருந்து முஸ்லீம்கள் இந்தியாவுக்கு வந்தவண்ணமாக இருக்கிறார்கள். ஆனால் இந்தியாவிலிருந்து பாகிஸ்தானுக்கு யார் போகப் பிரியப்படுகிறார்கள்? அங்குள்ளவர்கள்தான் இங்கு வரப் பிரியப்படுகிறார்கள். காரணம் என்ன? இந்தியாவில்தான், சுப்ரமணியம் அவர்கள் கூறியதுபோல, அவர்களுக்குச் சகலவிதமான வசதிகளும் இருக்கின்றன என்பதை ஒவ்வொரு முஸ்லீம் தோழரும் அறிய வேண்டுமென்பதுதான் என் அவா. இந்தியாவில் எங்கள் மதிப்பிற்குரிய ஜவகர்லால் நேருஜி இன்றைக்கு முஸ்லீம்களுக்கு முதல் இருப்பிடம் கொடுத்துத்தான் மற்றவைகளைப் பார்த்துக்கொண்டு வருகிறார்கள். டில்லியில் பாராளுமன்றத்தில் இருக்கிறபோது, அகில இந்திய முஸ்லீம் லீக் தலைவர் இஸ்மாயில் சாயபு அவர்கள் இருந்தார்கள். ஆறு வருஷமாக அச்சபையிலே பேசியிருக்கிறார். ஒரு தடவைகூட இந்தியாவில் முஸ்லீம்கள் கஷ்டப்படுகிறார்கள் என்று அவர் சொன்னதே கிடையாது. இப்போதுதான் அவர்கள் காங்கிரஸ் கட்சியை எதிர்க்கிறார்கள் என்று சொன்னால், அது வருந்தத்தக்க காரியம். இன்றைக்கு மேல் சபையில்கூட கட்சி வாதம் வந்துகொண்டேயிருக்கிறது. மதிப்பிற்குரிய நண்பர் ஸ்ரீமான் கே. ஆர். ராமசாமி அவர்களும், எம். ஜி. ஆர். அவர்களும் பேசினார்கள். ஆயுதம் கொடுத்து ஆயுதம் வாங்கக்கூடாது, எதிர்ப்பைக் காட்டி எதிர்ப்பை வாங்கக்கூடாது என்று சொன்னார். பரிதாபப்படுகிறோம். கட்சிசார்பு இன்றி கலையை வளர்க்கவேண்டுமென்று சொன்னார். கலைஞர்களை ஒவ்வொரு பிரஜையும் விரும்புகிறார்கள். படித்தவர்கள், படிக்காதவர்கள், அறிவாளிகள், அறிவில்லாதவர்கள் எல்லோரும் விரும்புகிறார்கள். கட்சியில் உள்ளவர்கள், கட்சியில் இல்லாதவர்கள் எல்லாம் மதிக்கிறார்கள். ஆகையால் கலைஞர்கள் கட்சி சார்பற்ற முறையில் இருந்தால்தான் கலை வளரும். குறிப்பாக இந்த வருஷ பட்ஜெட்டைப் பார்த்தால், சர்க்கார் ரொம்ப யோசனை செய்து, பரிசீலனை செய்து, யாருக்கு வரிபோட்டால் மக்களுக்குக் கஷ்டம் இருக்காது என்று பார்த்து, அந்த நிலையில்தான் வரி போட்டிருக்கிறார்கள். சாதாரண நிலையில் பார்த்தால், இன்றைக்கு பஸ், ஓட்டல், சினிமா இந்த மூன்று துறைகளில்தான் காசு வருகிறது என்று சொல்ல முடியும். ஒரு நாளைக்கு ஒரு ரூட் என்று போட்டால், எத்தனை அப்ளிகேஷன்கள் வருகின்றன? ஏன்? பஸ் ஓட்டுவதனால் பணம் அதிகமாக வருகிறது. பஸ் முதலாளிகள் பணம் சேர்க்கக்கூடியவர்கள் என்று சொல்லி, அவர்களுக்கு வரி போட்டால் அவர்களிடத்தில் வசூல்

[திரு. வி. எம். சுரேந்திரராம்] [5th July 1962

செய்யலாமென்று ஆரம்பித்தால், யார் பஸ் தொழிலை 'நேஷனலைஸ்' செய்யவேண்டுமென்று சொன்னார்களோ, அவர்களே வேண்டாமென்று சொல்கிறார்கள். ஊட்டியிலிருந்து மேட்டுப்பாளையத்திற்கு உருளைக்கிழங்கு ஏற்றிக்கொண்டு செல்ல குவாட்டருக்கு 250 ரூபாய் என்று கட்டிக்கொண்டு வருகிறார்கள். லாரிக்கு ரூ. 40 என்று வாடகை, ஒரு லோடுக்கு என்றால், ஆள் திரும்பிப் பார்த்தால் ரூ. 100 என்றும் சொல்கிறார்கள். டபிள் டபிளாக வாடகையை உயர்த்துகிறார்கள். அதை வசூல் செய்து ஏழை மக்களுக்குப் பள்ளிக்கூடம், ஆஸ்பத்திரி கட்டவும், ரோடு, குடி தண்ணீருக்கும்தான் அதைத் செலவு செய்யப்போகிறார்கள். அதற்குத்தான் பஸ்களுக்கு வரி போடுகிறார்கள். மூன்று நான்கு பஸ் இருக்கிறவர்களுக்குத்தான் கொஞ்சம் கஷ்டம். பெரிய பஸ் முதலாளிகளுக்கு இது கடுகளவு மாதிரிதான். அவர்கள் நன்றாகக் கொடுக்கலாம். யாரும் 'சப்போர்ட்' செய்யவேண்டியதில்லை. சிறிய பஸ் தொழிலாளர்களுக்கு சர்க்கார் கொஞ்சம் ஆலோசனை செய்ய லாம் என்று சொல்லலாம்.

சினிமாவில் ரொம்ப சௌகரியமாக இருக்கிறார்கள். அதைப் பற்றிச் சந்தோஷம்தான். அவர்களுக்கு அதற்கேற்ற வருவாய் இருக்கிறது. சினிமாத் தொழிலில் குறிப்பிட்ட அளவு வரி போட்டு வசூலிக்கலாம். வரி ஒன்றும் போடவேண்டாமென்று சொல்ல முடியுமா? முதலைக் கண்ணீர் மாதிரி, எதைப்போட்டாலும் வரி என்று பேசுவது சரியாக இருக்காது. சென்ட்ரல் கவர்ன்மெண்ட் பட்ஜெட்டில் வரி போட்டார்கள். போட்டதற்கெல்லாம் தூது கோஷ்டி இப்போதே டில்லிக்குப் போய்விட்டது. தமிழ்நாடு சர்க்காரும் வரி போட்டிருக்கிறார்கள். இனி இதற்கும் தூதுகோஷ்டிகள் வரும். வருகிற 7-ம் தேதி கூட சினிமாக்காரர்கள் தூதுகோஷ்டி வரப்போவதாக நண்பர் சொன்னார்.

திரு. எம். ஜி. ராமச்சந்திரன்: வேலையில்லாமல் பாதிக்கப்பட்டவர்களுக்காக வருகிறார்கள்.

திரு. வி. எம். சுரேந்திரராம்: இப்படிப் போனால் சர்க்கார் எதில்தான் வரிபோடுவது? ஒருவாரமாக நல்ல விவாதம் நடந்து கொண்டு வருகிறது. இரண்டு சபைகளிலும் எதிர்க்கட்சிக்காரர்கள் வரி போடக்கூடாது என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். மக்கள் இதனால் ரொம்ப பாதிக்கப்படுகிறார்கள் என்கிறார்கள். எதிர்க்கட்சியிலும் அன்பழகன் போன்ற பெரியவர்கள் இருக்கிறார்கள். மற்றும் திராவிட முன்னேற்றக் கட்சியில் நல்ல முக்கியஸ்தர்கள் எல்லாம் இருக்கிறார்கள். அவர்கள் இதற்கு ஏதாவது 'ஐடியா' சொல்கிறார்களா? இப்படிப் போனால் விலைவாசி குறையும், விலை உயர்வை எப்படிக் கட்டுப்படுத்துவது என்பதைப் பற்றி ஏதாவது சொல்கிறார்களா? சொன்னால் வரவேற்கிறோம். ஆளும் கட்சிக்கு எப்போதும் எதிர்ப்பு இருந்துகொண்டுதான் இருக்கும். ஜனங்களுக்கு நன்மை செய்யவேண்டுமென்றால், ஏதாவது செய்து தான் ஆகவேண்டும். அதற்காக மக்களுக்குத் தவறுகளைச் சொல்லி தவறான வழிகளில் அவர்களைக் கொண்டுபோகக்கூடாது, மக்களை ஏமாற்றக்கூடாது.

5th July 1962]

திரு. எம். ஜி. ராமச்சந்திரன்: ஐயா, "மக்களை ஏமாற்றக் கூடாது" என்பதை அங்கத்தினர் வாபஸ் பெறவேண்டும்.

திரு. வி. எம். சுரேந்திரராம்: அதை வாபஸ் வாங்கிக்கொள் கிறேன். தப்பாக 'லீட்' செய்யக்கூடாது என்றுதான் நான் சொல்கிறேன்.

இந்த வரிகளை எடுத்துக் கொண்டால், மின்சார உபயோகத்தின் மீது போடப்பட்டுள்ள வரியைப் பொறுத்த வரையில், Domestic consumption- -க்கு வரியைக் குறைத்து, மக்களைப் பாதிக்காமல் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்து, காட்டு இலாக்காவுக்கும் (Forest Department) அரசாங்கத்துக்கும் அதிகத் தொடர்பு இல்லாதது போல் காணப் படுகிறது. பல்லாயிரக் கணக்கான ரூபாய்கள் செலவழித்து மரம் நட்டிருக்கிறார்கள். கூடலூர் எரியாவில் Soft wood என்று சொல்லி, நல்ல அருமையான Thick forest- ஐ அழித்து விட்டு, Soft wood- ஐப் போட்டிருக்கிறார்கள். 'A bird in the hand is worth two in the bush' என்று சொல்லுவார்கள். அதை மறந்து, Soft wood போட்டு 'Failure' ஆகியிருக்கிறது. இந்த மாதிரி பணத்தைப் பாழாக்காமல் இருந்தால், நலமாக இருக்கு மென்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அடுத்து, சிறிய சர்க்கார் அலுவலகங்களுக்கு எல்லாம் ஜீப் வாங்கிக் கொடுத்திருக்கிறார்கள். அந்த அலுவலக அதிகாரிகளுக்கு ஜீப்பை எதற்கு உபயோகிப்பது என்று புரியாமல் அவர்கள் சொந்த காரியங்களுக்கு உபயோகப்படுத்துகிறார்கள். ஒரு ஜீப்பின் விலை ரூ. 12,000 அல்லது ரூ. 14,000 ஆகிறது. பத்து ஜீப்பை குறைத்தாலும் அரசாங்கத்துக்கு ஒரு லட்ச ரூபாய் மிச்சமாகும். யாருக்கு முக்கியமோ, எந்த அலுவலகத்துக்கு முக்கியமோ கொடுக்கட்டும். நான் வேண்டாமென்று சொல்லவில்லை. கோயம் புத்தூர் ஜில்லாவில் ஜீப்பை என்ன செய்வது என்று புரியாமல், இந்த ஆபீசுக்கு 10 நாள், அந்த ஆபீசுக்கு 10 நாள் என்று சொல்லி, ஜீப் ஓடாமல் இருக்கக்கூடாது என்பதற்காக பங்கு போட்டுக் கொள்ளுகிறார்கள். இந்த மாதிரியான இனங்களில் வீணாகும் செலவைத் தடுத்தால், எதிர்க்கட்சிக்காரர்கள் 'Charge' பண்ண இடமிருக்காது. மக்களைக் காப்பாற்ற வேண்டியது அரசாங்கத் தின் கடமை. ஆகையால் அரசாங்கம் இதையெல்லாம் கவனித்து, அனாவசியமான செலவைக் குறைக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு முடிக்கிறேன்.

* திரு. ஜே. பொன்னுசாமி வில்லவராயர்: தலைவரவர்களே, 1962-63 நிதிநிலை அறிக்கையை மனப்பூர்வமாக வரவேற்றுப் பேச விரும்புகிறேன். மக்களுக்கு நன்மை செய்யத்தான் வரி விதிக் கிறோம். வரி விதிக்காமல் எந்த அரசாங்கமும் நடப்பதாக என்னைப் போன்றவர்களுக்குத் தெரியவில்லை. எங்களைப் போல உள்ளவர்கள் சில யோசனைகளைத்தான் கூறுகிறோமே ஒழிய, வரிகளைக் கண்டித்தோ, குறை கூறியோ சொல்லவில்லை. உதாரணமாக மீன் 5-40 p.m.

பிடிப்புக்காக இந்த ஆண்டு 70, 80 இயந்திரப் படகுகளைக் கட்டுவதாக உத்தேசித்திருக்கிறார்கள். அப்படிக் கட்டப்படும் படகுகள் துறைமுகத்துக்கும், கடலுக்கும் இடையே போவதற்கோ, வருவதற்கோ வாய்ப்பாக இருக்க வேண்டும். உதாரணமாக, தூத்துக்குடியில் அனேக Boat கள் செய்து. அவை துறைமுகத்திற்கும் கடலுக்கும் போவதற்கோ, வருவதற்கோ வாய்ப்பில்லாமல் கட்டிக் கிடக்கிறது. மீன் இலாக்காவில், மீன் பிடித்து வந்தால், அவைகளை அவ்வப்போது குளிர் அறையில் வைக்க வசதியில்லாமல் இருக்கிறது. இப்படிப்பட்ட குறைகளை சர்க்கார் உடனடியாகக் கவனித்து, நிவர்த்திக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். மேலும் நைலான் நூல் வேண்டுமென்று கன்னியாகுமரி, தூத்துக்குடி முதலிய இடங்களில் உள்ள மீனவர்கள் கேட்கிறார்கள். தூத்துக்குடி போன்ற நகரங்களில் நைலான் நூல் கிடைப்பதில்லை. அந்த நூல் கிடைக்கும்படி சர்க்கார் நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

மேலும், தூத்துக்குடிக்கு வரவேண்டிய அனேக Industries வராமல் சுணங்கிக் கொண்டிருக்கின்றன. வந்த Industries நடக்காமல் இருக்கிறது. இந்த மாதிரி Industries களை ஏற்படுத்த உடனடியாக ஒருவர் முன்வராவிட்டால், அடுத்தவர்களுக்கு அந்த வாய்ப்பைக் கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும். அப்படி இல்லாவிட்டால், அந்த Industries- காக ஒதுக்கப்பட்ட நிதி வீணாகி விடும். ஆகையால் இவற்றையும் சர்க்கார் கவனித்து ஆவன செய்யவேண்டும்.

பெருஞ்சாலைகள் வந்தால்தான், போக்குவரத்துக்காக நாம் செலவிடும் பணம் நல்ல விதத்தில் உபயோகமாகும். பெருஞ்சாலைகள் வந்தால்தான் கிராமங்களில் இருக்கும் பண்டங்களைப் பட்டணங்களுக்குக் கொண்டு செல்ல முடியும். ஆகையால் மத்திய சர்க்காரை வற்புறுத்தி கன்னியாகுமரி, சென்னை பெருஞ்சாலையை நிர்மாணிக்க உடனடியாக ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

தூத்துக்குடியில் ஒரு பக்கம் Harbour- க்காக நிலங்களை ஆர்ஜிதம் செய்து கொண்டிருக்கிறோம். மறுபக்கம் நிலங்களை இனாமாகவும் Lease- க்கும் கொடுக்கிறார்கள். பெரும் பணக்காரர்கள் 400 ஏக்கர், 500 ஏக்கர் என்று இனாமாகவும், குத்தகைக்கும் அடைய முயற்சிக்கிறார்கள். இப்படி முயற்சிப்பதை அரசாங்கம் கண்டிப்பாகத் தடுத்து, ஏழைகளிடத்திலிருந்து எடுக்கும் நிலங்களைக் குறைத்துக் கொண்டு, வீணாக இருக்கும் நிலங்களை நம்முடைய Harbour திட்டத்திற்கு எடுத்துக் கொள்ள வேண்டும்.

அடுத்தது. கல்விச் சலுகை பின் தங்கியவர்களுக்கு என்று கண்டிருக்கிறோம். ஆனால் நாம் மதச்சார்பற்ற சர்க்கார் என்பதை மக்களுக்கு உணர்த்த, ஹரிஜனங்கள் எந்த மதத்தில் இருந்தாலும் அவர்களுக்கு நாம் சலுகை காட்ட முயற்சிக்க வேண்டும். கிறிஸ்துவ மதத்தையும், வேறு சில மதங்களையும் சார்ந்த

ஹரிஜனங்களுக்குக் கல்விச் சலுகை கிடையாது என்றிருப்பதை அமைச்சரவர்கள் கருணை கூர்ந்து கவனித்து அந்தச் சலுகையை எல்லா ஹரிஜனங்களுக்கும் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

மேலும், பாடப் புத்தகங்கள் சரியானபடி இருக்கின்றனவா என்பதையும் அரசாங்கம் கவனிக்க வேண்டும். இப்போது வெளி யாகி இருக்கிற பல பாடப் புத்தகங்களில், ஏழாம் வகுப்பு பாடப் புத்தகங்களில், ஏசு பெருமானை நல்ல விதத்தில் வருணிக்கவில்லை என்று சில மத குருமார்கள் என்னிடத்தில் வந்து தெரிவித் தார்கள். இந்த மாதிரியான குறைகளை முன்கூட்டியே வலிவு பெறுமல் தடுத்துவிட வேண்டும்.

மேலும், நாம் ஒற்றுமையாக இருக்க வேண்டும். நம்முடைய மன்றத்தில் நல்ல தலைவர்களும், படித்தவர்களும் இருக்கிறார்கள். நாம் யாரையாவது குறைவாகப் பேசினால், அது நம்முடைய மன்றத்தின் மதிப்பிற்கே ஒரு குறைவாக இருக்கும் என்பது என்னுடைய கருத்து. மேலும் சிலர் கதை சொல்லுவதிலும், எந்த சமூகத்தையும் தாக்காமல் கதை சொல்ல வேண்டும். கீழ் சட்ட மன்றத்தில் ஒரு நண்பர், கனம் கட்சா கௌண்டர் மீன் கூடைக் காரி கதை—

திரு. ஆர். வெங்கடாசலம்: தலைவரவர்களே, மற்றொரு சபை யின் நடவடிக்கையைப் பற்றி அங்கத்தினர் இங்கே பேசுவது சரியா?

டெபுடி சேர்மன்: அந்த சபையில் பேசியதைப் பற்றி இங்கே பேச வேண்டாம்.

திரு. பொன்னுசுவாமி வில்லவராயர்: ஒரு சமூகத்தாரையும் குறை கூறாமல் பெருந்தன்மையோடு பேசவேண்டுமென்று கேட்டுக் கொள்வதோடு, அரசாங்கம் வீணான செலவுகளைக் குறைத்துக் கொள்ளவேண்டுமென்று கூறி, எனக்குப் பேச சந்தர்ப்பம் அளித்த தற்கு தலைவரவர்களுக்கு நன்றி தெரிவித்து, முடிக்கிறேன்.

திரு. டி. ஜோகி கௌடர்: தலைவரவர்களே, 1962-63-ம் ஆண்டு பட்ஜெட்டை வரவேற்றுச் சில வார்த்தைகள் சொல்ல விரும்பு கிறேன். புதிதாக விதிக்க உத்தேசிக்கப்பட்டுள்ள வரிகளைக் கொஞ்சம் குறைத்தால் நல்லது என்று கருதுகின்றேன்.

நீலகிரி ஜில்லாவில் முக்கியமான சாகுபடி உருளைக்கிழங்கு, டீ இரண்டும் தான். உருளைக்கிழங்குக்கு நோய் வந்து ஜனங்கள் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். டீ விலை அதிகக் குறைவாக இருப்பதால், 20 ஏக்கர் டீ தோட்டக்காரர்களும் அதிகக் கஷ்டப் படுகிறார்கள். ஆகையால் அரசாங்கம் 'Government Loan' ஐக் கட்ட தவணை கொடுக்க வேண்டுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஊட்டி கச்சா பிலிம் பாக்டரிக்கு ஆட்கள் எடுக்கும் போது, முதல் சலுகை நீலகிரி மக்களுக்குக் கொடுக்க அரசாங்கம் உத்தரவு போட வேண்டும்.

[திரு. டி. ஜோகி கௌடர்] [5th July 1962

குந்தா அணைக்கட்டில் பூமி இழந்தோர்க்கு சீக்கிரம் பூமி கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, எனக்குப் பேச வாய்ப்பு அளித்ததற்கு நன்றி தெரிவித்து, முடித் துக்கொள்ளுகிறேன்.

DEPUTY CHAIRMAN : **The House will now adjourn and meet again at 3 p.m. tomorrow.**

**The House then adjourned.**

III.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

* 152. *Notification issued with G.O. Ms. No.* 662, *Industries, Labour and Co-operation, dated 2nd February* 1962 *regarding amendments to the Madras Factories Rules*, 1950.

* 153. *Notification issued with G.O. Ms. No.* 1990, *Industries, Labour and Co-operation, dated 30th March* 1962 *regarding amendment to the Minimum Wages (Madras) Rules*, 1953.

** 154. *Notification issued with G.O. Ms. No.* 2102, *Revenue, dated 11th May* 1962, *relating to shifting of check-post at Arambakkam village to Kavaraipettai Village.*

*** 155. *Notification issued with G.O. Ms. No.* 1608, *Home, dated 1st May* 1962, *regarding amendments to the Madras Probation of Offenders Rules*, 1947.

*** 156. *Notification issued with Reference No.* 7217/62-D 13, *dated 28th February* 1962 *by the Collector of Coimbatore directing the removal of Sri Bommappa Gounder, President, Rajanagar Panchayat, Gobichettipalayam, Coimbatore District from the office of the President of the said Panchayat with immediate effect.*

*** 157 *Notification issued with G.O. Ms. No.* 1006, *Public (Services), dated 23rd April* 1962, *regarding deletion of clause (e) of Regulation* 16 *of the Madras Public Service Commission Regulations*, 1954.

*** 158. *Notification issued with G.O. Ms. No.* 1067, *Revenue, dated the 9th March*, 1962 *directing that the appeals and revision petitions specified in column* (1) *of the table therein pending before the Commissioner, Hindu Religious and Charitable Endowments (Administration) Department against the orders of Sri M. S. Sarangapani Mudaliar, Deputy Commissioner shall be disposed of by the Judicial Officers specified in column* (2) *of the table.*

*** 159. *Statement XXXI showing action taken on assurances, promises and undertakings given during eighth and twelfth to nineteenth Sessions*, 1955 *and* 1958-61 *of the Legislative Council.*

* *The Madras Payment of Salaries and Removal of Disqualifications Act*, 1951 *(Madras Act No. XX of* 1951) *and the Rules made thereunder (English and Tamil).*

@ *The Madras Legislative Council Rules (English and Tamil).*

---

* Laid on the table of the House on 2nd July 1962.
** Laid on the table of the House on 3rd July 1962.
*** Laid on the table of the House on 4th July 1962.
a Sent by special messengers on 2nd July 1962.